

மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்தில் நடைபெற்ற அருளாளர் மெய்கண்ட தேவநாயனார் விழாவில் மாண்புமிகு தமிழ்வளர்ச்சி , பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்கள். ஆணையாளர் திருமிகு. ச. மெய்கண்டதேவன் , இ.ஆ.ப., தலைமை தாங்கினார்கள். பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள், மயிலம் ஆதீனம் தவத்திரு சிவஞான பாலைய சுவாமிகள், திருவண்ணாமலை (குன்றக்குடி ஆதீனம்) தவத்திரு பொன்னம்பல அடிகள், மயிலை சட்டமன்ற உறுப்பினர் திருமிகு. இராமஜெயம் ஆகியோர் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். சென்னை இணை ஆணையாளர் திரு. இரா. சுப்பிரமணியன், பி.ஏ.,பி.எல்., அவர்கள் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தார்கள்.

# திருக்கோயில்



திங்கள் இதழ்



தனி இதழ் : ரூ. 5.00

ஆண்டு உறுப்பினர் கட்டணம் : ரூ. 60.00

ஆயுள் உறுப்பினர் கட்டணம் : ரூ. 500.00

| மாலை 40 | திருவள்ளுவர் ஆண்டு 2029 மே 1998 | வெகுதானிய ஆண்டு வைகாசி | மணி 5 |
|---|---|---|---|




## முக்கிய அறிவிப்பு

அச்சக மாற்றம் காரணமாகத் "திருக்கோயில்" இதழ் சில திங்கள் வெளிவரவில்லை. இனி தாமதமின்றி வெளிவரும். நல்லாதரவு தர அன்புடன் வேண்டுகின்றோம்.

## பொருளடக்கம்




திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை.

119, உத்தமர் காந்தி சாலை, சென்னை - 600 034.

தொலைபேசி : 8279407

# திருக்கோயில் பணியாளர்கள் சம்பளம் உயர்வு

— மாண்புமிகு தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர்
முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள்

இந்து சமய அறநிலையத்துறை மானியக் கோரிக்கைகள் மீது சட்டசபையில் நடந்த விவாதத்துக்கு பதில் அளித்து மாண்புமிகு அமைச்சர் முனைவர் மு.தமிழ்க்குடிமகன் அவர்கள் பேசிய போது, இதுபற்றி அவர் கூறியவதாவது:

**சம்பள உயர்வு**

தற்போது ரூ.10 ஆயிரத்தில் இருந்து ஒரு லட்ச ரூபாய் வரை வருவாய் பெறும் முதுநிலை இல்லாத திருக்கோவில்களில் இதுவரை வழங்கப்பட்டு வந்த தொகுப்பூதிய முறையை மாற்றி இந்தக் கோவில் பணியாளர்களுக்கும் 3 வகையான ஊதிய விகிதங்கள் கொடுக்கப்படும்.

திருத்திய சம்பள ஏற்றுமுறை 1.7.97 முதல் செயல்படுத்தப்படும். மேலும், திருத்திய ஊதிய விகிதப்படி 1.7.97 - ல் பெறப்பட்ட அடிப்படை சம்பளம் மற்றும் அகவிலைப்படி (189) ஒன்றாக இணைக்கப்படும்.

மேற்படி ஊதிய உயர்வினால் திருக்கோவில்களுக்கு மொத்த கூடுதல் செலவு உத்தேசமாக ரூ.5.28 கோடி ஆகும். இதில் ஏறத்தாழ 4,700 முதுநிலை திருக்கோவில் பணியாளர்களுக்கு ரூ. 3.19 கோடி மற்றும் ஏறத்தாழ 15,955 முதுநிலை அல்லாத திருக்கோவில் பணியாளர்களுக்கு ரூ.2.08 கோடி அதிக செலவு ஆகும்.

கோவில் பணியாளர்கள் ஊதிய உயர்வாக நாங்கள் கேட்டது 20 சதவீதம். மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் தந்தது 30 சதவீதம். நிதியை தந்ததோடு மட்டுமல்லாமல், கருணையோடும் தந்தார். அதனால்தான் கருணை நிதியாக இருக்கிறார்.

★ கோவில் சொத்துக்களை மீட்க அரசு கடுமையான நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. இதுவரையில் தனியாரிடம் இருந்து 1,367 ஏக்கர் நிலங்களும், 354 கிரவுண்டு வீட்டுமனைகளும் மீட்கப்பட்டுள்ளன.

★ தமிழ்நாட்டில் 36 ஆயிரத்து 253 கோவில்கள் இருக்கின்றன. எல்லா கோவில்களுமே நூற்றுக் கணக்கான, ஆயிரக்கணக்கான ஆண்டுகள் பழமை வாய்ந்தவை. ஒரு கோவிலுக்குத் திருப்பணி செய்ய வேண்டுமானால் 15 லட்சத்தில் இருந்து 25 லட்ச ரூபாய் வரை செலவாகும். அந்த கோவிலின் வருமானமே 200 ரூபாய்தான். இருமுனையையும் எப்படி ஒட்டவைப்பது என்று தெரியவில்லை.

**கிரிமினல் சட்டம்**

★ கோவில் சொத்து ஆக்கிரமிப்புக் குற்றத்தை இனிமேல் கிரிமினல் சட்டத்தின்கீழ் கொண்டுவரும் வகையில் அரசு சட்டத் திருத்தம் கொண்டுவந்தது. இதன்மூலம் கோவில் சொத்துக்களை ஆக்கிரமிப்பு செய்பவர்களுக்கு 3 மாதத்தில் இருந்து 6 மாதங்கள் வரை சிறைத்தண்டனை விதிக்கமுடியும்.

**தமிழ்ப் புலவர் நியமனம்**

★ கோவில்களில் தேவாரம், திருவாசகம், திவ்விய பிரபந்தம் பாடுவதற்காக 135 புலவர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. இதுமேலும் விரிவுப்படுத்தப்படும்.

**தமிழ் அர்ச்சனை**

★ கடந்த 2 ஆண்டுகளில் 923 கோவில்களுக்கு குடமுழுக்கு செய்யப்பட்டது.

★ இந்த அரசு எடுத்த பெரிய உரிய நடவடிக்கைகளால் தமிழில் அர்ச்சனை என்ற மாண்புமிகு முதல்வர் கலைஞரின் நீண்ட கால கனவு நிறைவேறியுள்ளது.

**ஒளிப்பேழை தயாரிப்பு**

★ தமிழ்நாட்டில் உள்ள கோவில்களின் சிறப்புகளை உலகம் முழுதும் அறிவிக்கும் வகையில் முதல் கட்டமாக 11 கோவில்கள் பற்றிய ஒளிப் பேழை, ஒலிநாடாக்களை அரசுத் திரைப்படத்துறை தயாரித்து வருகிறது.

**தமிழ்ச் சங்கம்**

★ தமிழுக்கு கலைஞரை விட தொண்டு செய்பவர்கள் இனிமேல்தான் பிறந்து வரவேண்டும்.



மாண்புமிகு தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் அறநிலையத்துறையின் சார்பில் இலவசத் திருமணங்களை நடத்தி வைக்கிறார்கள்.

விரைவில் உலகத் தமிழ்ச் சங்கம் இயங்க நடவடிக்கை எடுக்கப்படும். உலகத் தமிழ் மாநாட்டை சென்னையிலா, தமிழ் நாட்டிலா, உலகத்தில் எங்கு நடத்துவது என்று ஆராய்ந்து நடவடிக்கை எடுக்கப்படும்.

★ 29 மாவட்டங்களிலும் இசைப்பள்ளிகள் வர வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கம்.

★ பாடல்பெற்ற மற்றும் மங்களா சாசனம் பெற்ற 50 திருக்கோவில்களில் இந்த ஆண்டு திருப்பணிகள் செய்யப்பட்டு குடமுழுக்கு நடத்தப்படும்.

★ கோவில்களில் 100 ஓதுவார்கள் பணியிட வாய்ப்புகள் இந்த ஆண்டு உருவாக்கப்படும்.

## பூஜை

★ ஏற்கனவே 7,628 கோவில்களில் ஒருகால பூஜைக்காக தலா 25 ஆயிரம் ரூபாய் வைப்புநிதியில் வைக்கப்பட்டு அதில் இருந்து கிடைக்கும் வட்டித் தொகையைக் கொண்டு தினமும் ஒருகால பூஜை நடத்தப்படுகிறது. இந்த ஆண்டு மேலும் ஆயிரம் கோவில்களில் ஒருகால பூஜைக்காக தலா ரூ.25ஆயிரம் வைப்புநிதியாக வைக்கப்படும்.

★ 50 பெரிய கோவில்களி... பக்தர்கள் தங்கும் இடவசதி ... அமைக்க நிதி ஒதுக்கப்படும்.

★ தமிழ்நாடு அரசு இலக்கியச் சங்க பலகை( தமிழ் சாகித்ய அகாடமி). தொடங்க முதல் - அமைச்சர் அனுமதி அளித்தார். வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்கள் தமிழ் இருக்கைகள் அமைக்க முன்வந்தால் அந்த பல்கலைக் கழகங்களுக்கு ஒரு தொகை ஒதுக்கப்படும்.

★ புதிய இலக்கண நூல் உருவாக்க வல்லுநர் குழு அமைக்க முதல் - அமைச்சர் உத்திரவிட்டுள்ளார். விழுப்புரம், கடலூர், கரூர், பெரம்பலூர், தூத்துக்குடி ஆகிய இடங்களில் புதிய இசைப்பள்ளிகள் தொடங்கப்படும்.

★ வேலூர், திண்டுக்கல், தர்மபுரி, ராமநாதபுரம், தேனி போன்ற இடங்களில் ஜவகர் சிறுவர் இல்லங்கள் அமைக்கப்படும்.

## காஞ்சியில் அருங்காட்சியகம்

காஞ்சிபுரம், நாகப்பட்டினத்தில் அருங்காட்சியகம் அமைக்கப்படும்.

★ இப்போது ஆண்டுக்கு 300 நலிந்த கலைஞர்களுக்கு நிதிஉதவி வழங்கப்படுகிறது. இனி 500 பே.: களுக்கு வழங்கப்படும்.

தமிழ்நாட்டில் தமிழ் ஆட்சி மொழியாகும் சூழ்நிலை படிப்படியாக நடைபெறுகிறது. தமிழனுக்கு எங்காவது ஒரு தீமை ஏற்பட்டால் அதைத் தட்டிக் கேட்கும் குரலாக கலைஞர் இருக்கிறார்.

மேற்கண்டவாறு மாண்புமிகு அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் பேசினார்கள்.

★ ★ ★

# அருள்திரு மாதவச் சிவஞானமாமுனிவர் திருநாள் விழா

## தலைமையுரை

திருமிகு ச. மெய்கண்ட தேவன் இ.ஆ.ப
ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 34.

இன்றைய நாள், தமிழகத்தின் ஆன்மிகத் தலைநகராம் காஞ்சியம்பதியில், தொன்மையும் பெருமையும் மிக்க அருள்மிகு ஏகாம்பரேசுவரர் திருக்கோயிலில் நடைபெறும் அருள்திரு மாதவச் **சிவஞான மாமுனிவர்** திருநாள் விழாவிற்குத் தலைமை தாங்குவதிலே அளவற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

இவருடைய குருபூசை விழா 4.8.98 அன்று கொண்டாடப்பட்டு இருத்தல் வேண்டும். ஆனால் இறைவன் திருவுள்ளம் **மூன்று அருளாளர்களுடைய** குருபூசைவிழா ஒரேநாளில் கொண்டாடப்பெறுதல் வேணடும் எனத் திருவருள் பாலித்தபடியால்

**இன்று சித்திரை அத்தம் உமாபதி சிவத்திற்குரிய குருபூசைநாளில் அவருடைய திருநாள் விழா தில்லையில் கொண்டாடப்படுகின்றது.**

**சித்திரை ஆயில்யம்** நம்முடைய மாதவ சிவஞான மாமுனிவருடைய திருநாள். 4.5.98 அன்று கொண்டாடப்பட்டிருக்கவேண்டிய அவருடைய குருபூசை விழாவை இன்று (8.5.98) இங்கே மிகச் சிறப்பாகக் கொண்டாடுகிறோம்.

**சித்திரை புனர்பூசம்** கவிராட்சச கச்சியப்ப முனிவருடைய குருபூசைத் திருநாள் 2.5.98 அன்று அவருக்கு விழா கொண்டாடப்பட்டிருக்க வேண்டும். தணிகைப்புராணம் பாடிய கச்சியப்ப முனிவருக்குத் திருத்தணிகையில் இன்று விழா இதே நேரத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

முப்பெரும் அருளாளர்களுடைய விழாவை ஒரே நாளில் முப்பெரும் ஊர்களில் கொண்டாடுவதும் ஒரு சிறப்புதான். அவ்வகையில் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க அரும்பணிகள் புரிந்த அருளாளர்கள் மூவருக்குத் தனித்தனியே அவரவர் தொடர்புடைய திருத்தலங்களில் விழா கொண்டாடி அறநிலையத்துறை அருளாளர்களின் அரும்பணிகளை நன்றியுடன் நினைவுகூர்ந்து மகிழுகின்றது என்பதை நான் மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

''சித்தாந்த அட்டகம்'' என்னும் எட்டு மெய்கண்ட சாத்திர நூல்களை அருளிச் செய்துள்ள உமாபதி சிவம் அவர்கள் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்து அரும்பணிகள் ஆற்றியுள்ளார்.

அவருடைய
1. சிவப்பிரகாசம்
2. திருவருட்பயன்
3. வினாவெண்பா
4. போற்றிப் பஃறொடை
5. உண்மைநெறி விளக்கம்
6. கொடிக்கவி
7. நெஞ்சுவிடுதூது
8. சங்கற்ப நிராகரணம்.

ஆகிய 8 நூல்கள் சைவசித்தாந்தத்தின் தலைசிறந்த சாத்திர நூல்களாக விளங்கும் சிறப்பை எல்லாம் நீங்கள் நன்கு அறிவீர்கள். முள்ளிச் செடிக்கும் முத்திக் கொடுத்த பேரருளாளர் உமாபதி சிவம் பாடியுள்ள ''கொடிக்கவி'' பாடினால் கொடி தானாக ஏறும். அதுபோல உயிரும் தானாக மேலே ஏறி இறைநிலையை அடையும் என்பது சிறப்பு: அத்தகைய உமாபதி சிவத்திற்கு அவர் வாழ்ந்த தில்லையிலே திருநாள் விழா.

அவருடைய ஞான வழியிலே வந்து, சைவ சித்தாந்தத்திற்கு அளப்பரிய தொண்டுகள் புரிந்த மாதவ சிவஞான மாமுனிவருக்கு காஞ்சியிலே அருள்மிகு ஏகாம்பரேசுவரர் திருக்கோயிலில் திருநாள் விழா.

''கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று
நுதலும்
கண்டாரை வசப்படுத்தும் கனிந்தவாய்
அழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்தில்
பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத
மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன்
மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில்
சிரத்தில்
ஒதிடுநா வினில் என்றும் உன்னிவைத்தே
உரைப்பாம்''

ன்று மதுரகவி சுப்பிரமணிய முனிவர் நமது மாதவ வஞான மாமுனிவரின் திருத்தோற்றத்தை நம் ண்களிலே கொண்டு வந்து நிறுத்துகின்றார்.

மாதவ சிவஞானமாமுனிவர் 18ஆம் நூற் ாண்டில் தமிழகம் செய்த தவப்பயனாகத் தான்றிய ஒரு மாமேதை. கற்றவர் விழுங்கும் ற்பகக்கனி. அறிஞர்கள் போற்றும் பேரறிஞர். ஞானத்தின் திருவுரு. வடமொழி, தென்தமிழ் ரண்டிலும் நிகரற்ற பெரும்புலவர்.

நாம் போற்றுகின்ற பெரும்புலவர்கள் பலரும் லக்கியத்துறையில் ஒன்றிரண்டு துறைகளில் ான் தம்முடைய கைவண்ணத்தைக் காட்டியுள் ார்கள்.

ஆனால் நம்முடைய மாதவ சிவஞான ாமுனிவர் தமிழ்ப் பெருங்கடலைக் கரைத்துக்குடித்த கத்திய முனிவர் என்றுதான் சொல்லவேண்டும்.

அகத்திய முனிவரின் வரத்தால் இவர் றந்தவர் என்ற வரலாறும் இவருக்கு உள்ளது.

மகத்துவமிக்க அகத்தியமுனிவர் வரத்தி ால் ஏழுதலைமுறை வரையும் அருட்புலமை ரம்ப வரம்பெற்ற சைவ வேளாளர் பரம்பரையிலே னந்தக் கூத்தர் என்பவர் விக்கிரமசிங்கபுரத்திலே ாழ்ந்து வந்தார். திருநெல்வேலி மாவட்டத்தில் ருப்பது இவர் தோன்றிய பெருமைக்குரிய விக்கிரம ங்கபுரம்.

ஆனந்தக்கூத்தர் குருபக்தி, சிவபக்தி, அடியார் க்திகளில் தலைசிறந்தவர். அவருடைய மனைவியார் யிலம்மையார். ஏழுதலைமுறைக்கு இவர் குடியில் பிறப்பவருக்கு இயல்பாகவே அருட்புலமை தோன்றி விடும் என்று அகத்தியர் அளித்திருந்த வரத்திற்கு ஒப்ப ஏழாவது தலைமுறையில் ஆனந்தக் கூத்தருக்கும் - மயிலம்மைக்கும் அருந்தவ மகவாக வந்து தோன்றி யவர்தாம் நம் மாதவச் சிவஞான முனிவர்.

இவருடைய பிள்ளைத் திருநாமம், பெற்றோர் போற்றி வைத்த திருநாமம் முக்களாலிங்கர் என்பதாகும்.

முக்களாலிங்கரின் 5 வயதிலேயே ஒரு அற்புதம் நடைபெற்றது. திருஞான சம்பந்தர் 3 வயதிலேயே உமா தேவியாரிடம் ஞானப்பால் உண்டது போல, மெய்கண்டார் 2 வயதிலேயே பரஞ்சோதி முனிவரிடம் ஞான உபதேசம் பெற்றதுபோல, 5 வயதிலே முக்களாலிங்கர் வரலாற்றிலே ஒரு அற்புதம் நடைபெற்றுள்ளது.

திருவாடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த முனிவர்கள் பொதிய மலைச்சாரலில் உள்ள பாபநாசம் எனும் சிவாலயத்தைத் தரிசித்துத் திரும்பும் வழியில் முக்களாலிங்கர் வாழ்ந்திருந்த விக்கிரமசிங்கபுரத்தின் வழியே வந்துள்ளார்கள்.

அம்முனிவர்களைத் தரிசித்து வணங்கிய 5 வயது முக்களாலிங்கர் ''சுவாமி! இல்லம் வந்து அமுது செய்து செல்ல வேண்டும்'' என்று வேண்டியுள்ளது.

குழந்தையின் ஞானம் ததும்பும் முகத்தைப் பார்த்த முனிவர்களால் மறுத்துப் பேசமுடியவில்லை.

முனிவர்களோடு வந்து ''இவர்களுக்கு அமுது படையும் அம்மா'' என்று முக்களாலிங்கர் வேண்டதாய் மயிலம்மையும் குழந்தையின் விருப்பத்தை மகிழ்ந்து நிறைவேற்றியுள்ளார்.

5 வயதிலே தாயைப் பாராட்டி ஒரு வெண்பா பாடியுள்ளார் முக்களாலிங்கர்.

''அருந்ததி என்அம்மை அடியவர்கட்
கென்றும்
திருந்த அமுதளிக்கும் செல்வி - பொருந்தவே
ஆனந்தக் கூத்தர் அகம்மகிழத் தொண்டு
செய்யும்
மானந் தவாத மயில்''

நம் வீட்டுக் குழந்தைகள் 5 வயதிலே 'மண்ணிலே கிடந்து புரளும். கண்டதைக் கேட்டுத் தொல்லை செய்யும். முக்களாலிங்கர் எனும் இந்த மாதவசிவஞானக் குழந்தை முனிவர்களுக்கு அமுது

படைத்தது மட்டுமல்ல. அமுது செய்வித்த அன்னைக்குப் பாராட்டு, அப்பாராட்டிலே தந்தைக்கும் பாராட்டு. இதுதான் தெய்வக் குழந்தை என்பதை உணர்த்தும் அடையாளம்.

ஐந்து வயதிலேயே முனிவர்களோடு அவர்களுடைய ஆதீனத்திற்கு வந்துவிட்டது இந்த ஞானக் குழந்தை. மெய்கண்ட சாத்திரங்கள் அனைத்தும் ஆதீனத்திலே கற்றுக் கொண்டுவிட்டது. திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் **வேலப்ப தேசிகரே** இவருடைய ஞானகுரு. தம் ஞானகுருவிடம் சைவ சந்நியாசமும், சிவதீட்டையும் பெற்று **சிவஞான யோகிகள்** என்னும் தீட்சா நாமமும் பெற்றுவிட்டார்.

மாதவ சிவஞான மாமுனிவர் 29 நூல்களை அருளிச் செய்துள்ளார்கள். **இலக்கண நூல்கள், சைவ சித்தாந்த நூல்கள், சைவ சித்தாந்தத்திற்கு உரை விளக்க நூல்கள், பிள்ளைத்தமிழ் நூல்கள், நீதி நூல்கள், தருக்க நூல்கள்** என்று எத்தனை எத்தனை துறைகள் உண்டோ அத்தனை துறைகளிலும் நூல்களைச் செய்துள்ள பெருமை நம்முடைய சிவஞான முனிவரையே சாரும்.

அவர் செய்த தலைசிறந்த தலபுராண நூல்தான் **காஞ்சிப்புராணம்.**

சிவஞானமுனிவர் அருளியுள்ள காஞ்சிப் புராணம் **2742** பாடல்களைக் கொண்டு விளங்குகின்றது. இவர் இவ்வளவு விரிவாக இயற்றியும் காஞ்சிப்புராணம் முற்றுப்பெறவில்லை. ஆகவே இவர் செய்துள்ள காஞ்சிப்புராணம் **முதல் காண்டம்** எனவும், இவருடைய 12 மாணாக்கர்களில் தலை மாணவரான கவிராட்சச கச்சியப்ப முனிவர் இயற்றியுள்ள காஞ்சிப் புராணம் இரண்டாம் காண்டம் எனவும் அழைக்கப்படுவதாக அறிகிறேன்.

காஞ்சிப்புரணத்தை இதே ஏகாம்பரேசுவரர் ஆலயத்தில் நம்முடைய சிவஞானமாமுனிவர் அரங்கேற்றிய போது ஒரு சுவையான நிகழ்ச்சி நடைபெற்றுள்ளது.

சிவஞான முனிவர்மேல் காழ்ப்புணர்ச்சி கொண்ட ஒரு ஓதுவார் அரங்கேற்றவிழாவில் வந்து சிறுகுழப்பத்தைச் செய்துள்ளார்.

''முத்தி நகரங்கள் ஏழில் ஒன்றான இந்த காஞ்சியின் மேல் புராணம் பாடவந்த நீங்கள் தில்லை நடராசருக்கு முதலில் எப்படி வாழ்த்து கூறலாம்? ஏகாம்பர நாதருக்கு அல்லவா வாழ்த்து முதலில் கூறவேண்டும்?''

மாதவ சிவஞானமுனிவர் தில்லை நடராசருக்கு முதலில் வாழ்த்து ஏன் என்பதற்குரிய காரணங்களை எல்லாம் விவாமாக எடுத்துக் கூறி விளக்கியும், போதிய கல்விப்பயிற்சி இல்லாத அந்த ஓதுவார் வீண் வாதம் செய்து வந்திருக்கின்றார்.

அப்பொழுது அருகிலிருந்த கச்சியப்ப முனிவர் தம் ஆசான் சிவஞான முனிவருக்குத் தம் வணக்கங்களைக் கூறி இவரை என்பால் விட்டு விடுக. அடியேன் பார்த்துக்கொள்கின்றேன்.'' என்று கேட்டுக் கொண்டுள்ளார்!

''ஓதுவாமூர்த்திகளே! உமக்குத் தேவாரம் பாடவருமா?''

''ஓ! நன்றாகப் பாடுவேன்!
என் வேலையே தேவாரம் ஓதுவதுதானே!

''அப்படியானால் இந்தத் தலத்துத் தேவாரத்தை ஓதும், கேட்கலாம்.''

ஓதுவார் ஊக்கமுடன் தேவாரம் ஓதவந்தவர் ஓதுமுன் ''திருச்சிற்றம்பலம்'' என்றார்.

உடனே கச்சியப்ப முனிவர் கம்பீரமாக ''ஓதுவாமூர்த்திகளே! நிறுத்தும். உம்மைக் காஞ்சிபுரத் தேவாரம் சொல்லச் சொன்னால் திருவேகம்பம் என்று சொல்லாமல், திருச்சிற்றம்பலம் என்று சொல்லுகின்றீர்?'' என்று மடக்கியுள்ளார் கச்சியப்ப முனிவர்.

உடனே ஓதுவார் ''திருச்சிற்றம்பலம் என்பது எல்லாத் தலங்களுக்கும் பொதுவானது'' என்று கூற, கச்சியப்ப முனிவரும் காஞ்சி புராணத்தில் தில்லை நடராசருக்கு முதலில் வாழ்த்து கூறப்பட்டிருப்பதற்கும் அதுவே காரணம் என்று தெளிவுபடுத்திய பிறகு ஓதுவார் அடங்க, காஞ்சிப்புராணத்தின் அரங்கேற்றம் சிறப்புற நடைபெற்றதாக அறிகிறோம்.

அத்தகைய காஞ்சிஅருள்மிகு ஏகாம்பரேசுவரர் ஆலயத்திலேயே காஞ்சிப்புராணம் பாடிய மாதவ சிவஞான மாமுனிவருக்கு திருநாள்விழா நடைபெறுவது சிறப்புமிக்க வரலாற்று நிகழ்ச்சி என்பதில் யாருக்கும் எவ்வித ஐயமும் இருக்கப் போவதில்லை.

காஞ்சிப் புராணத்தில் சிவஞானமுனிவர் அருளியுள்ள நால்வர் துதிப்பாடல்கள் அருமையிலும் அருமையானவை.

''பரசமய கோளரியைப்
பாலறாவாயனை''

என்று தொடங்கி ஞானசம்பந்தரையும்

''இடையறாப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும்''

என்று திருநாவுக்கரசு சுவாமிகளையும்,

''ஒரு மனத்தைச் சிதைவு செய்து '' என்று தொடங்கிச் சுந்தர மூர்த்திச் சுவாமிகளையும் மாதவ சிவஞான மாமுனிவர் பாடியுள்ள தேவார மூவர் துதிக்கு ஒப்பான துதிப் பாடல்கள் வேறு இருக்க முடியாது.

சமயகுரவர் நால்வர் மீதில் அவருக்கு அப்படியொரு பற்று. தம்முடைய உருத்திராக்கமாலையில் நால்வர் நான்மணிமாலையை உருண்டை வடிவமான சுவடி ஒன்றில் எழுதி அதனையும் இணைத்து அணிந்திருந்தார் என்று அறியும்போது சமய குரவர் நால்வர் மேல் அவருக்கிருந்த பக்தியை எண்ணிப் பரவசப்படுகின்றோம்.

சமய குரவர்மேல் தாம் கொண்டிருந்த பற்றினைப் போலவே சந்தானகுரவர் நால்வர் மேலும் எல்லையற்ற பக்தி பூண்டிருந்தார்கள். ஆகவேதான் சிவஞான போதத்திற்குச் சிற்றுரையும், பேருரையும், சிவஞானசித்தியார்க்கு விளக்கவுரையும் வழங்கியும் அரும்பெரும் தொண்டினை ஆற்றியுள்ள நம் சுவாமிகளை ''திராவிட மாபாடியகாரர்'' என்றே வையம் போற்றி வருகின்றது.

இவருடைய காஞ்சிப்புராணம் முழுதும் சைவ சித்தாந்த நறுமணம்வீசும் அருந்தமிழ்க் கருவூலமாக விளங்குவதை நமக்குச் சான்றோர்கள் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

சிவஞானம் மேலிட்டால் மும்மலநோய் நீங்கிவிடும். மும்மலநோய் நீங்கிவிட்டாலும்கூட வாசனாமலம் என்பது முற்றிலும் நீங்காமல் இருந்து வரும் என்பது சைவ சித்தாந்திகள் கூறும் கருத்து.

இதை நம்முடைய சிவஞானமாமுனிவரும் காஞ்சிப்புராணத்தில் உவமையாகக் கூறுகிறார். நந்திமலையில் பெய்த பெருமழை நின்றுவிட்டாலும், மரங்களின் இலைகளில் தேங்கிய மழைநீர் சிறுசிறு திவலைகளாகச் சிந்திக் கொண்டிருப்பது எப்படியிருக்கின்றது என்றால் மும்மலம் நீங்கிய பிறகும் வாசனா மலம் நீங்காது இருத்தல் போல என்று காஞ்சிப் புராணத்தில் சிவஞான முனிவர் பாடியுள்ள பாடலில் உள்ள சைவ சித்தாந்தக் கருத்து எண்ணிப் பார்த்து மகிழ்வதற்குரியது.

''போதம் மேலாகப் பண்டே
புல்லியமலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்குமாபோல்
மழைப்பெயல் மாறித் தீர்ந்தும்....
மரங்கள் எல்லாம் நுண்துளி நுவற்றும் மாதோ''

உழவர்கள் பல மடைகளில் போகாதவாறு ஒரே வழியில் நீரினை வயலுக்குப் பாய்ச்சுவது போல, ஐம்பொறிகளின் வழியாகச் செல்லும் மனத்தை ஒரே நெறியில் செலுத்தினால் சிவத்தைக் காணலாம் என்று காஞ்சிப்புராணத்தில் பாடியுள்ள கவிதையும் இங்கு நினைந்து மகிழத்தக்கது.

''பொறிகள் ஐந்தையும் புறஞ்செலாது
அடக்கிஓர் நெறிக்கே
குறிகொளும்படி செலுத்தும் பேராளர்தம்
கோள்போல்
பிறிவுறும்பல மடைகளில்
பிழைத்திடா தொதுக்கிச்
செறிதரும் புனல் முழுதும்
அகன்பணை செறிப்பார்''

இவருடைய அளவிறந்த ஞானப்பெருக்கினைக் காஞ்சிப் புராணத்தில் மட்டுமல்லாது இவருடைய பிறநூல்கள் அனைத்திலும் காண்கிறோம்.

இவருடைய நூல்களைப் பட்டியல் இட்டாலே இவருடைய ஞானத்தைப் பட்டியல் இட்டது போலத்தான்.

கலைசைச் செங்கழுநீர் விநாயகர்
பிள்ளைத்தமிழ்
திருமுல்லைவாயில் அந்தாதி
திருக் கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி
திரு ஏகம்பர் அந்தாதி
குளத்தூர் பதிற்றுப்பத்தந்தாதி
இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி
அகிலாண்டேசுவரிபதிகம்
கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம்
திருத்தொண்டர் திருநாமக் கோவை
சோமேசர் முதுமொழி வெண்பா
கம்பராமாயண முதற்செய்யுள் சங்கோத்தர
விருத்தி
ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் மாலை
தொல்காப்பியச் சூத்திர விருத்தி
இலக்கண விளக்கச் சூறாவளி
நன்னூல் விருத்தியுரை
சிவஞான மாபாடியம்
சிவஞான போதச் சிற்றுரை
சிவஞான சித்தியார் பொழிப்புரை
சித்தாந்த மரபு கண்டன கண்டனம்
தருக்க சங்கிரகம்

சுலோகபஞ்சகம்
சிவதத்துவ விவேகம்

இவ்வாறு அவர் செய்துள்ள நூல்களைப் பட்டியல் இடும்போதே அந்த ஞானக்கடல் மீது அச்சம் கலந்த பயம் நமக்கெல்லாம் ஏற்படுவது உண்மை.

ஒருகுடம் பாலுக்கு ஒருதுளி என

கலைசைச் செங்கழுநீர்
விநாயகர்

பிள்ளைத் தமிழில் ஒரு பாடல்:

''மலைவுஅற முப்பொருள் இயல்பு
தெளித்தருள்
ஒருமுதலே
மலையென முற்படும் வினைகள்
அறச்செய்யும்
எம துயிரே
அலையும் மனத்தையும் நிலையில்
நிறுத்திடும்
அருளுருவே
அமிழ்தின் இனித்துப்பல் இடனும்
முகிழ்த்தொளிர்
சிவவிளைவே
உலைவறு கற்பகம் எனவருள் கொட்டிய
மழகளிறே
உலகம் அனைத்துநின் உடலில் அடக்கிய
நிறைபொருளே
கலைசையின் உற்பவ இறைவ முழக்குக
சிறுபறையே
கடலொலி பிற்பட இனிது முழக்குக
சிறுபறையே''

வடநூற்கடலும், தென்நூற்கடலும் நிலைகண்டுணர்ந்த மாதவச்சிவஞானமாமுனிவர் தம் வாழ்நாளை எல்லாம் தமிழ் வளர்ச்சிக்காகவும், சைவ சமய வளர்ச்சிக்காகவும் அர்ப்பணித்த அருளாளர் பெருந்தகை.

அவருடைய திருநாளை அவர் காஞ்சிப் புராணம் இயற்றி அரங்கேற்றிய இத்திருத் தலத்திலேயே கொண்டாடக் கிடைத்த பேற்றிற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அவர் பேசுவது கூட கவிதையாகவே வரும் என்று ஆன்றோர்கள் கூறுவார்கள். சமையற்காரனுக்கு இன்ன சமைத்தல் செய்க என்று அவர் சொல்லியது கூட ஒரு சிறந்த கவிதையாக விளங்கி வருகின்றது.

''சற்றே துவயலரை தம்பிஒரு பச்சடிவை
வற்றல் ஏதேனும் வறுத்துவை - குற்றமிலை
காயமிட்டுக் கீரைகடை கம்மெனவே
மிளகுக்
காயரைத்து வைப்பாய் கறி''

இதுவும் நம் சுவாமிகள் பாடிய பாடல்தான்.

திருக்குறளைப் போற்றாத தமிழ்நெஞ்சம் இருக்கமுடியாது எவ்பதைக் காட்டும்வகையிலே அவர் திருக்குறளையும், பெரிய புராணத்தையும் இணைத்து ஒருசேரப் பாடியுள்ள ''சோமேசர் முதுமொழிவெண்பா'' இன்று எல்லோராலும் அறியப் படும் - போற்றப்படும் இலக்கியமாக இருந்து வருகின்றது.

''அப்பூதியார் மறைத்தும் வாகீசர் அக்கரவை
துப்பால் அறிந்தனரே சோமேசா - இப்புவியில்
ஐயப்படாது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்''

என்பது சோமேசர் முதுமொழி வெண்பாவில் ஒரு பாடல். குறிப்பினால் உணரவல்லவர் தெய்வத்திற்கு ஒப்பாவர் என்று குறள் கூறுகிறது. இதனை விளக்க அப்பூதியடிகள் வரலாற்றினை எடுத்துக்காட்டிப் பாடியுள்ளார் நம் சுவாமிகள்.

அப்பூதியடிகள் தம் மகன் பாம்பு கடித்து மாண்டதை மறைத்தும், குறிப்பால் உணர்ந்து கொண்ட நாவுக்கரசர் தெய்வத்திற்கு சமமானவர் என்பதை எவ்வளவு எளிமையாக மேலுள்ள வெண்பாவில் விளக்கியுள்ளார் நம் சுவாமிகள்.

தமிழ்செய்த தவமாக வந்து
18ஆம் நூற்றாண்டில் தோன்றிய
அருளாளர் பெருந்தகை மாதவ
சிவஞானமாமுனிவர்.
வடநூற்கடலும், தென்நூற்கடலும்
ஒருங்கு கற்றுணர்ந்த கல்விக்கடல்,
ஞானக்கடல்

''கன்னல்சருக்கரைபாகு கற்கண்டு முப்பழமொடு
அன்னமுடன் பாதெளிதேன் அவைகளிலும்
மிகுசுவைசேர்
சொன்னயமும் பொருள்நயமும் துலங்கிஒளிர்
பாடல்களைத்
தென் தமிழால் தருந்துறைசைச் சிவஞான
தேசிகனே''

இங்கு அறிஞர் பெருமக்கள் பலரும் சிவஞான அமுதம் வழங்க வருகை தந்துள்ளீர்கள். நானும் அந்த அமுதம் பருகவே ஆர்வமோடு இருப்பதால் இத்துடன் எளிய என் தலைமையுரையை நிறைவு செய்து நன்றிகூறி அமைகின்றேன்.

வணக்கம்.

# ஆணையாளரின் சுற்றறிக்கை

## சுற்றறிக்கை எண். 22450/ கே. 1 நாள்: 20.3.98

**பொருள்:** மெய்கண்ட சாத்திரங்கள் - நடராசர் சந்நிதியில் போற்றிவைத்து வழிபாடு இயற்றிட அறிவுறுத்துவது பற்றியது.

திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் அருளியுள்ள திருவாலங்காட்டுத் திருப்பதிகத்தில்

''தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே''

என்று அருளிச் செய்துள்ளார்கள். இறைவன் தோத்திர நூல்களாகவும், சாத்திர நூல்களாகவும் விளங்குகிறான் என்பது இதன் பொருளாகும்.

அருளாளர் பெருமக்கள் அருளிச் செய்துள்ள தோத்திர நூல்களும், சாத்திர நூல்களும் இறைவனைப் போன்றே போற்றி வழிபடத்தக்க திருவருள் மிக்கவை என்பதனைத் திருநாவுக்கரசு பெருமான் ,

''தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே'' என்ற தொடரின் வாயிலாக இவ்வுலகிற்கு இனிதே எடுத்துரைத்துள்ளார்கள்.

அப்பரடிகளின் அப்போற்றரும் கருத்தினுக்கு ஏற்பவே இறைவனின் தோத்திர நூல்களாகிய பன்னிரு திருமுறை நூல்களை நடராசர் சந்நிதியில் நடராசனின் வலப்புறமாகப் பேழை ஒன்றில் வைத்து வழிபட்டு வரும் வழக்கம் நடைமுறையில் இருந்து வருகின்றது.

தோத்திர நூல்களை வைத்து வழிபட்டு வருவதைப் போலவே அனைத்துச் சிவாலயங்களிலும் நடராசர் சந்நிதியில் நடராசரின் இடப்புறத்தில் பதினான்கு மெய்கண்ட சாத்திர நூல்களை போற்றி வைத்து வழிபடவேண்டும் என்ற அறிவுரையை 27.12.97 அன்று தலைமைச் செயலகத்தில் நடைபெற்ற தமிழ் அருச்சனை மேம்பாட்டுக் கூட்டத்தில் சிவாச்சாரியார் பெருமக்கள் எடுத்துரைத்தார்கள்.

இக்கருத்தினுக்குத் தமிழ் அர்ச்சனை மேம்பாட்டுக் கூட்டத்திற்குத் தலைமை ஏற்றிருந்த மாண்பு மிகு அறநிலையத்துறை அமைச்சர் அவர்களும், கூட்டத்திற்கு வருகை தந்திருந்த தமிழ் அறிஞர் பெருமக்களும் இசைவு வழங்கினார்கள்.

மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கும் நம் தமிழர்தம் நுண்மாண் நுழைப்புலத்தை எடுத்துக் காட்டும் மிகச் சிறந்த தத்துவ நுட்பங்களைக் கொண்டு விளங்குவனவாகும். கி.பி. 13 மற்றும் கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த மிகச் சிறந்த அருளாளர் பெருமக்களால் அவனிஉய்ய அருளிச் செய்யப்பெற்ற சைவசித்தாந்த விளக்க நூல்களே இம்மெய்கண்ட சாத்திர நூல்களும் ஆகும்.

மெய்கண்ட சாத்திர நூல்களின் பெயர் மற்றும் அவற்றைத் தோற்றுவித்த அருளாளர் பெயர்கள் பின்வருமாறு:

1. திருவுந்தியார் - திருவியலூர் உய்ய வந்த தேவ நாயனார் அருளியது
2. திருக்களிற்றுப் படியார் - திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் அருளியது
3. சிவஞான போதம் - மெய்கண்ட தேவநாயனார் அருளியது.
4. சிவஞான சித்தியார் - அருணந்தி சிவாச்சாரியார் அருளியது.
5. இருபா இருபஃது - அருணந்தி சிவாச்சாரியார் அருளியது.
6. உண்மை விளக்கம் - திருவதிகை மனவாசகம் கடந்தார் அருளியது.
7. சிவப்பிரகாசம் - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.
8. திருவருட் பயன் - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.
9. வினா வெண்பா - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.
10. போற்றிப் பஃறொடை - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.
11. உண்மை நெறி விளக்கம் - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.
12. கொடிக்கவி - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.



மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்தில் நடைபெற்ற புத்தொளிப் பயிற்சி வகுப்புகளைத் தொடங்கிவைத்து நம் ஆணையாளர் **திருமிகு ச. மெய்கண்டதேவன், இ.ஆ.ப.,** அவர்கள் உரையாற்றுகிறார்கள்.

*13.* நெஞ்சுவிடு தூது - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.

*14.* சங்கற்ப நிராகரணம் - உமாபதி சிவாச்சாரியார் அருளியது.

இப்பதினான்கு மெய்கண்ட சாத்திர நூல்களை நம் சைவத்திருமடங்களும், சென்னையிலுள்ள சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் வெளியிட்டுள்ளன.

''தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே''

என்று அருளியுள்ள அப்பரடிகள் அருள்மொழியைப் போற்றிக் கடைப்பிடித்து அனைத்துச் சிவாலயங்களிலும் நடராசர்சந்நிதியில் பன்னிரு திருமுறை நூல்களைப் போலவே, மெய்கண்ட சாத்திர நூல்களையும் போற்றிவைத்து வழிபட இச்சுற்றறிக்கை மூலம் அறிவுறுத்தப்படுகின்றது.

பதினான்கு மெய்கண்ட சாத்திர நூல்களை ஒரு பட்டாடையில் சுற்றியும், புதிய பேழையில் வைத்தும் வழிபட அறிவுறுத்தப்படுகின்றது.

பன்னிரு திருமுறை நூல்களை ஏற்கனவே நடராசர் சந்நிதியின் வலப்புறம் வைத்து வழிபட்டு வருவதால் மெய்கண்ட சாத்திர நூல்களை நடராசர் சந்நிதியின் இடப்புறம் போற்றி வைத்து வழிபட அறிவுறுத்தப்படுகின்றது.

அனைத்து இணை ஆணையர்கள், உதவி ஆணையர்கள் மெய்கண்ட சாத்திர நூல்களை அனைத்துச் சிவாலயங்களிலும் உடன் நடராசர் சந்நிதியில் மேற்கூறிய அறிவுரைகளைக கடைப்பிடித்து வழிபாடு நிகழ்த்திட தக்க நடவடிக்கை எடுக்க அறிவுறுத்தப்படுகின்றது.

இச்சுற்றிக்கை கிடைக்கப் பெற்றதற்கான ஒப்புதலை உடன் அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்ளப்படுகின்றது.

ச. மெய்கண்டதேவன்
ஆணையர்.

★ ★ ★

# ஆணையாளரின் சுற்றறிக்கை

## சுற்றறிக்கை 33253/98 /கே. 1 நாள். 29.4.98

பொருள் : சிவாலயங்களில் சந்தான குரவர் நால்வருக்குத் தனிச் சந்நிதி அமைப்பது பற்றியது.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் , மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் சைவசமய குரவர் எனச் சிறப்பிக்கப்பட்டு வருகின்றனர். சிவாலயங் களில் இந்நால்வர் பெருமக்களுக்கும் தனியாக திருமேனிகள் அமைத்து வழிபாடு செய்து மக்கள் பயன்பெற்று வருகின்றனர்.

சமயகுரவர் இந்நால்வரைப் போலவே மெய்கண்ட தேவநாயனார், அருள்நந்தி சிவம், மறை ஞான சம்பந்தர், உமாபதிசிவம் ஆகிய நால்வரைச் சந்தானகுரவர் என சைவ சமயம் போற்றிச்சிறப்பித்து வருகின்றது.

தம்முடைய 3 வயதில் உமாதேவியாரிடம் ஞானப்பாலுண்டு தேவாரம் பாடிய திருஞான சம்பந் தரைப் போல, தம்முடைய இருவயதில் சிவஞான உபதேசம் பெற்று ' சிவஞானபோதம்' எனும் சைவ சித்தாந்தக் கருவூலத்தை நமக்கருளிச் செய்த ''ஞான பானு'' தாம் மெய்கண்ட தேவ நாயனார் ஆவார்.

மெய்கண்ட தேவ நாயனார் இவ்வுலகில் தோன்றுவதற்கு திருமுறையிலிருந்து வழிகாட்டி உதவிப் பின் அம் மெய்கண்ட தேவ நாயனாருக்குத் தாமே மாணவராகிச் 'சிவஞானசித்தியார்', ''இருபா இருபஃது'' ஆகிய ஒப்பற்ற சித்தாந்த நூல்களை அருளிச் செய்த அருளாளர்தாம் அருள்நந்தி சிவம் ஆவார்.

வீண் ஆடம்பர ஆரவாரங்களில் அறிவைச் செலுத்தி மயங்கியிருந்த உமாபதி சிவாச்சாரியார் தம் மயக்கம் தெளிவித்து, அவரைத் தம் மாணவராக்கி அருள்நெறிக்கு ஆட்கொண்ட அருட்பெருந்தகையே மறைஞான சம்பந்தம் ஆவார்.

சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, உண்மைநெறி விளக்கம், கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம் எனும் சித்தாந்த அட்டக நூல்களை அருளிச் செய்தவரும், தில்லையில் பல அருளற்புதங்கள் புரிந்து முள்ளிச் செடிக்கும் முத்திக் கொடுத்த அருளாளரும் தாம் உமாபதி சிவம் ஆவார்.

''தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே'' என்ற அப்பரடிகளின் அருள்வாக்கிற்கு இணங்க, தோத்திர நூல்களுக் கொப்பான மெய்கண்ட சாத்திர நூல்களை அருளிச் செய்த இவ்வருளாளர் பெருமக்கள் நால்வரையும் ''சந்தான குரவர் '' என சைவ சமயம் சிறப்பித்துப் போற்றி வருகின்றது.

கி.பி 13 மற்றும் 14 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்து, சைவமும் தமிழும் தழைத்தோங்க அரும் பணிகள் ஆற்றியுள்ள இச் ''சந்தானகுரவர்'' நால் வருக்கும், சமயகுரவர் நால்வரைப் போலவே சிவா லயங்களில் திருமேனிகள் அமைத்து வழிபாடு நிகழ்த்த வேண்டும் எனச் சிவாச்சாரியப் பெருமக்கள் வலி யுறுத்தி வருகின்றார்கள். ஆதீனகர்த்தர்களும், தமிழ்ச் சான்றோர் பெருமக்களும் இக்கோரிக்கையை ஏற்று ஆவன செய்யப் பெரிதும் வற்புறுத்தி வருகிறார்கள்.

தவத்திரு தருமபுர ஆதீனம், திருவாவடுதுறை ஆதீனம், திருவண்ணாமலை ஆதீனம், திருப்பனந்தாள் ஆதீனம், காஞ்சிசங்கர மடம் ஆகிய ஆதீனங்களின் ஆதீனகர்த்தர்கள் சந்தான குரவர் திருமேனி அமைத்து வழிபட ஒப்புதல் வழங்கியுள்ளார்கள். இது குறித்து மாண்புமிகு முதல்வர் தலைமையில் கூடிய திருக் கோயில் ஆலோசனைக் குழு கூட்டத்தில் பேசப் பட்டு, திருமேனிகள் அமைக்க ஒப்புதல் அளிக்கப் பட்டுள்ளது.

ஆகவே தமிழகத்திலுள்ள அனைத்துப் பாடல்பெற்ற சிவாலயங்களிலும், முக்கிய சிவா லயங்களிலும் சந்தானகுரவர் நால்வருக்குத் திரு மேனிகள் அமைத்து வழிபாடுகள் நிகழ்த்திட அனுமதி வழங்கப்படுகின்றது. இத்திருமேனிகள் 63 நாயன்மார்களுக்கு அடுத்து, அமைக்கப் பெறுதல் வேண்டும்.

இணை ஆணையர்கள் அனைவரும் தத்தம் மண்டலத்திலுள்ள சிவாலயங்களிலும் சந்தான குரவர் நால்வருக்குத் திருமேனிகள் அமைத்து வழிபட உடன் தக்க நடவடிக்கை எடுக்க அறி வுறுத்தப்படுகின்றது.

ஆன்றோர் பெருமக்களிடம் ஒப்புதல் பெற்ற சந்தானகுரவர் திருவுருவப் படங்களும் இத்துடன் இணைத்து அனுப்பப்பட்டுள்ளன.

இத்திருவப்படங்களை ஒப்பு நோக்கிச் சந்தானகுரவர் தம் திருவுருவங்கள் அமைத்துக் கொள்ளவும், சிவாலயங்களில் 63 நாயன்மார்களுக்கு அடுத்து திருமேனிகளை அமைக்கவும், வழிபாடு நிகழ்த்தவும் இணை ஆணையாளர்கள் தக்க நடவடிக்கை மேற் கொள்ள அறிவுறுத்தப்படுகின்றது.

சந்தானகுரவர் தம் குருபூசை நாட்களில் திருக்கோயில்களில் புறப்பாடு நிகழ்த்தும் வகையில் அவர்தம் ஐம்பொன்மேனிகளும் அமைத்துக் கொள்ள அனுமதி வழங்கப்படுகின்றது.

இச்சுற்றறிக்கை கிடைக்கப் பெற்றதற்கான ஒப்புதலை உடன் அனுப்பி வைக்க கேட்டுக்கொள்ளப் படுகின்றது.

ச. மெய்கண்டதேவன்
ஆணையர்.



# கருத்து மலர்கள்



## ஆடம்பரம் தவிர்த்திடுக

அழகான பலூனை அளவுக்கு மேல் ஊதினால் ''படார்''. இந்நிலை நமது வாழ்வுக்கு ஏற்பட்டு விடக்கூடாது.

வரவுக்கு ஏற்ற செலவும், தகுதிக்கேற்ற உறவும் கொள்ளாவிடில் ''கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி'' கதையாகிவிடும். ஆடம்பரக் கனவி னின்றும் விடுபடுங்கள். அனுதினமும் பாடுபட்டுப் பலன் பெறுங்கள்.

**- சுவாமி விவேகானந்தர்.**

## பக்தி எதற்கு?

தங்கரதமும் தேவாமிர்தமும் கிடைப்பதற் கல்ல நமது முன்னோர் பக்தி செய்யச் சொன்னது. மனிதனாக வாழ்விற்கு இன்றியமையாத நெறிகளைத் தருவதுதான் பக்தியின் அடிப்படை.

**- சுவாமி விவேகானந்தர்.**

## பணிவினால் பெறலாம் பயன்

தண்ணீர் இறைக்கும் ஏற்றம் பணிவதனால் கிணற்றிலுள்ள நீரை முகக்கின்றது, அவ்வாறே ஆன்றோர் களிடம் பணிந்தால் அவர்கள்பால் தேங்கிக் கிடக்கும் அறிவுவெள்ளத்தை நாம் முகர்ந்து கொள்ள லாம்.

துலாக்கோலில் தாழ்ந்த தட்டுக்குத்தானே பெருமை. காய்த்துப்பழுத்துப் பயனுடைய மரக்கிளை தாழ்ந்து இருக்கும். காய்கனி இல்லாத கிளைகள் உயர்ந்து நிற்கும். எதற்குப் பெருமை? தாழ்ந்த கிளைக்கா? உயர்ந்த கிளைக்கா? எண்ணிப் பாருங்கள்.

**- சுவாமி விவேகானந்தர்**

## திருக்கோயில் வழிபாட்டால் இறையருளைப் பெறலாம்.

இறைவன் எங்கும் நிறைந்திருப்பினும் ஆலயத்தில் உள்ள திருவுருவத்தில் விளங்கித் தோன்றுகின்றான். பசுவின் உடம்பு முழுதும் பால் நிறைந்திருக்கின்றது. பாலைப் பெறமுயலுகின்ற ஒருவன் அதன் கொம்பையோ காதுகளையோ வாலையோ வருடினால் பால் கிடைக்குமா? பால் பெறவிரும்புவோன் பசுவின் மடியை வருடிப் பால் பெறுவதுபோல், இறைவன் அருளைப் பெற விரும்புவோன் ஆலயத்தில் சென்று இறைவன் திருமுன் நின்று வழிபட்டுத் திருவருளைப் பெறுதல் வேண்டும்

**- டாக்டர் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்**

★★★

# திருநாராயணபுரம்

— வேணுகோபால நாயகர்

இராமாநுசர் வைணவ மதத்திற்குச் செய்த சேவை மிகவும் மகத்தானது, ஆழ்வார்களுடைய பாடல்களை எல்லாக் கோயில்களிலும் விசேஷங் களிலும் ஓதும்படி நியமித்தார்.

ஆழ்வார்கள் பாடியுள்ள தலங்களே திவ்ய தேசங்கள் என்று சிறப்பித்துக்கூறுவார்கள்.

இப்படியாக திவ்விய தேசங்கள் என்று போற்றப்படுபவை 108 தலங்களாகும். இவற்றுள்ளும் மிகச் சிறப்பாகப் போற்றப்படும் தலங்கள் நான்கு.

அவையே 1. திருவரங்கம் 2. திருமலை 3. பெருமாள்கோயில் எனப்படும் காஞ்சி அல்லது கச்சியம்பதி, 4. மேல்கோட்டை என்று பொது மக்களால் அழைக்கப்படும் திருநாராயணபுரம், திரு வரங்கத்தை, - போக மண்டபம் என்றும், திருமலை யை - புட்ப மண்டபம் என்றும், காஞ்சியை - யாகமண்டபம் என்றும் திருநாராயணபுரத்தை - ஞான மண்டபம் என்றும் வைணவர்கள் போற்றுவார்கள்.

இந்த நான்கு திவ்ய தேசங்களும் மிகச் சிறப்படைந்தமைக்குக் காரணம் நம் இராமாநுசரே. இராமாநுசர் இந்த நான்கு திவ்யதேசங்களில் பல காலம் வாசம்புரிந்து இத்தலங்களை மிகவும் சிறப்பாகப் பரிபாலித்து வந்தார். அவர் ஏற்படுத்திய நடைமுறை கள் படியே இன்றும் இத்தலங்களை நிர்வாகம் செய்து வருகிறார்கள்.

திருநாராயணபுரம், கர்நாடக மாநிலத்தில் - பெங்க ளூரிலிருந்து மைசூர் செல்லும் நெடுஞ்சாலைக்கு அருகாமையில் உள்ளது. மைசூருக்குச் சமீபம். இராமாநுசரால் திருநாராயணபுரம் சிறப்படைந் தனதைப் பற்றிக் காணலாம். திருநாராயணபுரத்திற்கு அடியேன் குடும்பத்துடன் சில தடவை சென்று அனுபவித்துள்ளேன். ஸ்ரீரங்கத்தை ஆயிரம் ஆண்டு களுக்கு முன் ஆண்ட சோழ மன்னன் வைணவ விரோதி. நம் இராமாநுசரைக் கொடுமைப் படுத்த முயன்றார். எனவே சீடர்களின் வேண்டுகோளின்படி இராமாநுசர் சோழ நாட்டைவிட்டு கர்நாடக தேசத்தில் உள்ள திருநாராயணபுரம் சேர்ந்தார்.

கர்நாடக மன்னன் ஜைன மதத்தில் சேர்ந் திருந்தான். ஜைனர்கள் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது, அவர்களை வாதில் வென்று அவர்களை யும், கர்நாடக மன்னனையும் வைணவராக்கினார் இராமாநுசர்.

இராமாநுசர் ஜைனர்களை வென்றதற்குச் சான்றாக இன்றும் திருநாராயணபுரத்தை அடுத்த தொண்டனூரில் ஆதிசேடனின் விரித்த படங்களுடன் இராமாநுசர் எழுந்தருளியிருப்பதைக் காணலாம். மன்னனும் வைணவனாகி விஷ்ணுவர்த்தனன் என்று பெயர் சூட்டிக் கொண்டான்.

விஷ்ணுவர்த்தன அரசனின் துணையுடனும், வைணவத்தைத் தழுவிய ஜைனர்கள் பல்லாயிரக் கணக்கானவர் உதவியுடனும் தொண்டனூரில் மிகப் பெரிய ஏரியை இராமாநுசர் ஏற்படுத்தினார்.

வைணவ பக்தர்கள் குறைந்துவிட்ட காரணத் தால் திருநாராயணபுரம் கோயில் மிகவும் சேதமாகி, பூசையற்றுக் கிடந்தது. இராமாநுசருடைய கனவில் திருநாராயணப்பெருமாள் தோன்றி தாம் இருக்கும் இடத்தைக் குறிப்பிட்டு, தமது கோயிலைத் திருப் பணி செய்து புதுப்பிக்க நியமித்தார்.

இராமாநுசரும் புற்று மூடப்பட்டு இருந்த திருநாராயணப்பெருமாள் சந்நிதியைப் புதுப்பித்தார்.

திருநாராயணப் பெருமாளும், அடுத்துள்ள யதுகிரி நாச்சியாரும் மிக்க அழகாகச் சேவை சாதிப் பார்கள். கர்நாடக தேச அலங்காரபாணியின் அம்சங் களை இத்தலத்தில் பெருமாளையும், தாயாரையும் சேவிக்கையில் நன்கு ரசிக்கலாம்.

திரு நாராயணபுரத்தில் உள்ள திருக்குளத் திற்கு கல்யாண தீர்த்தம் எனப் பெயர். இத்திருக் குளத்தில் இராமாநுசர் நீராடி வந்தனைகள் செய்து கொண்டிருந்த சமயம், சோழ தேசத்தில் தம்மை வருத்திய, கிருமி கண்ட சோழன் இறந்துபோன சேதி எட்டியது. அதை மங்களமான சேதியாக ஏற்று உடையவர் ''கல்யாண்'' என்ற படியால் இத்திருக் குளத்திற்குக் கல்யாண தீர்த்தம் எனப்பெயர்.

திருநாராயணபுரத்தைச் சூழ்ந்தபடி எட்டு தீர்த்தங்கள் உள்ளன. அந்தத் தீர்த்தங்கள் அட்ட தீர்த்தங்கள் என அழைக்கப்படுகின்றன!

திருநாராயணபுரத்தில் நம் எம்பெருமானார் 12 ஆண்டுகள் தங்கியிருந்தார். ஒரு சமயம் வெள்ளைத் திருமண் கிடைக்கவில்லை. நம் பாஷியக் காரர் மிக்க கவலையுடன் துயில்கையில் திருநாராயணப் பெருமாள், திருநாராயணபுரத்தைச் சூழ்ந்துள்ள மலையடிவாரத்தில் வெள்ளைத் திருமண் கிடைக்கக் கூடிய இடத்தைக் குறிப்பிடவும் அவ்விதமே தோண்டிப் பார்த்ததில் வெள்ளைத் திருமண் கிடைத்ததாம். இன்றும் திருநாராயணபுரம் வெள்ளைத் திருமண் உயர்ந்ததாக உள்ளது.

திருவீதியில் வாகனங்களில் எழுந்தருளி விழாக்கண்டருளிய உற்சவ மூர்த்தியை முகாலய மன்னன் திருநாரயண புரத்தைக் கொள்ளையடித்த சமயம் டில்லிக்கு எடுத்துச் சென்றுவிட்டதாக கேள்விப்பட்டார்.

உடனே நம் உடையவர் பல்லாயிரக்கணக் கானப் பக்தர்களுடன் டில்லிக்குச் சென்று முகலாய மன்னனைக் கண்டு அவனை மகிழச் செய்து உற்சவ மூர்த்தியைத் தரும்படி வேண்டினார்.

உற்சவமூர்த்தியை முகலாய மன்னன் மகள் மிக்க காதலுடன் பாராட்டிவந்தாள். ''உடையவரும் அவ்விளவரசியின் அந்தப்புரம் சென்று உற்சவப் பெருமாளை'' என் செல்லப் பிள்ளாய்! வாராய்!'' என அழைக்கவும் செல்லப் பிள்ளையும் ஓடி குதித்து வந்து நம் உடையவர்மடியில் அமர்ந்துகொண்டார் ஒரு குழந்தைபோல.

இப்படி நம் இராமாநுசர் 'செல்லப் பிள்ளையே! என அன்புடன் அழைத்ததால் இந்த உற்சவமூர்த்திக்கும் செல்லப்பிள்ளை என்று தமிழிலும், சம்பத்குமாரர் என்று வடமொழியிலும் திருநாமங்கள் ஏற்பட்டன. இம்மூர்த்திக்கு ராமப் பிரியர் எனவும் ஒரு திருப்பெயர் உண்டு. அயோத்தியில் ஸ்ரீராமபிரானால் பூசிக்கப் பட்டதால் இப்பெயர் உண்டா யிற்றாம்.

செல்லப் பிள்ளையின் விழாக்களில் வைர முடிசேவை மிகவும் சிறப்பானது. அன்று செல்லப் பெருமாள் கருடன் மீது ஏறி மிக விலைஉயர்ந்த திருமுடியைச் சாற்றிக்கொண்டு இரவில் எழுந்தருளுவார். வைணதேவன் என்றால் கருடன். வைணதேவன் மீது காட்சியளிக்கையில் அணியும் முடி வைணமுடி. பிறகு இதைவைரமுடி என்று பொது மக்கள் கூறுவார்கள்.

மைசூர் மன்னன் அளித்த இராசமுடியை அணிந்து பெருமாள் எழுந்தருளுகையில் இராசமுடி சேவை என்பார்கள்.

நம் உடையவர் இத்தலத்தில் மிகப் பெரிய புரட்சியை ஏற்படுத்தினார். தீண்டப்படாத மக்கள் என்று கூறப்பட்டவர்கட்கு இராமாநுசர் திருக்குலத்து அடியார்கள் எனப் பெயரிட்டு, அவர்களுக்கு ஆலயப் பிரவேச உரிமையும் அளித்தார். அவருக்குப் பின் இந்த உரிமை கால வழக்கில் தேய்ந்து வைர முடிசேவை சமயம் மட்டும் மூன்று நாட்களுக்கு திருச்சுற்றுகளில் மட்டும் செல்லும் வழக்கம் ஏற்பட்டது. மகாத்மா காந்தி அடிகளின் பெருமுயற்சியால் இன்று இந்திய தேசத்தில் எல்லாக் கோயில்களிலும் அரிசன ஆலய வழிபாடு சட்டப்படி பாதுகாக்கப்பட்டுள்ளது.

திருநாராயணபுர ஆலயத்தின் எதிரில் உள்ள மலையில் யோக நரசிங்கப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். மலை ஏறுவது சுலபம்தான். யோக நரசிம்மப் பெருமாள் மிகக் கம்பீரமாகக் காட்சி தருகிறார். இந்த மலையில் உச்சியில் இருந்து பார்த்தால் திருநாராயணபுரமும், தொலைவில் மைசூரும் தெரியும்.

நம் எம்பெருமானார் திருநாராயணபுரத்தில் தமது கைங்கரியங்கள் முடிவு பெற்றதும் திருவரங்கம் செல்ல விரும்பினார். சீடர்கள் மிகவும் வருத்த முற்று அவரைப்போன்ற ஒரு திவ்விய திருமேனியை ஏற்படுத்தித் தரும்படி வேண்டினர். அவ்விதமே அவரைப் போன்ற அழகான வடிவம் ஏற்படுத்தப் பட்டது. சீடர்களுக்குத் திருப்தி இல்லை. இராமாநுசரைப் போன்றே அவரது திருவடிவும் தம்முடன் பேசவேண்டும் எனச்சீடர்கள் வேண்டினர்.

தமது திருவடிவிற்கு முன் ஒரு திரையை இடச் செய்து, 'அருளப்பாடு' நம் இராமாநுசன்! என்று அர்ச்சகரைக் கொண்டு அழைக்கவும், உள்ளிருந்த இராமாநுச வடிவும் நாயந்தேன்! நாயந்தேன்! என்று பதில் தந்தது. பெருமாள் சார்பில் மரியாதை செய்ய அர்ச்சகர் இப்படி அழைப்பதும் அழைக்கப்பட்டவர் பரம பக்தியுடனும் பணிவுடனும் இப்படி பதில் உரைத்துக்கொண்டு வருவதும் வழக்கமாக இருந்து வருகிறது.

இப்படியாக இத்தலத்து இராமாநுசர் பேசிய-படியால் இவரைப் ''பேசும் எதிராஜர்'' என்று போற்றுவார்கள். இராமாநுசரின் சீடர்கள், அதாவது தமர்கள்-மிகவும் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டபடியால் இத்தலத்தின் எழுந்தருளியுள்ள இராமாநுசரின் வடிவை ''தமர் உகந்த திருமேனி'' எனக் கொண்டாடுகின்றனர்.



இன்னும் ஒரு குறையிருந்தது. இத்தலத்திற்கு ஆழ்வார்கள் பாடல் இருந்தால் தான் திவ்விய தேசம் எனச் சிறப்பிக்கப்படும். எனவே அக்குறையும் தீர இராமானுசர் இத்தலத்திற்கு, நம்மாழ்வார், திருவாய்மொழியில் 'ஒரு நாயகமாய்' என்று தொடங்கும் பத்துப் பாடல்களை அளித்தருளினார்.

அதன் முதல் பாசுரம் இதுவே.

''ஒரு நாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைஇய பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம்
கொள்வர்
திருநாராயணன் தான்காணப் பெறச் சிந்தித்து
உய்ம்மினோ''

நம் வைணவ தரிசனம் மிக எளியது. இதனைக் கடைபிடிக்க மிகச் சுலபமான வழிகளைத் தம் சீடர்களுக்கு உபதேசித்துக் கொண்டுவந்த நம் உடையவர் கடைசியாகச் சொன்ன அறிவுரை இதுதான்.

ஒரு நாளாகிலும், திருநாராயணபுரத்தில் குடிசை போடுங்கள்! ஒரு நாள் திருநாராயணபுர வாசம் செய்தால் போதுமாம். சகல வைணவ சம்பத்தும் கிடைக்குமாம். எனவே இதுவரை திருநாராயண புரம் சென்று சேவிக்காதவர்கள், எப்படியாவது ஒரு முறையாவது திருநாராயணபுரம் சென்று ஸ்ரீ நாராயணப் பெருமானையும், யதுகிரி நாச்சியாரையும், ஸ்ரீயோக நரசிம்மரையும், ஸ்ரீ செல்வப் பிள்ளையையும் பேசும் எதிராஜரையும் சேவித்து மகிழும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

★★★

# சித்தர்களின் யோக நெறி

முனைவர் திருமதி இரா. கலாவதி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,

'சித்தன் போக்கு சிவன் போக்கு' என்று கூறுவது உலக வழக்கு. தம் போக்கில் திரிபவர்களை இவ்வாறு கூறுவர். அடுத்தவேளை உணவைப் பற்றி அக்கறையின்றி, தமக்கென எதையும் தேடி வைத்துக்கொள்ளாது தாம் போன போக்கில் போய்க் கொண்டிருப்பர் சித்தர். கனிவு, குழந்தை போன்ற களங்கமில்லாத உள்ளம், உலகின் அறியாமையைச் சுட்டிக் காட்டும் தெளிந்தநிலை, இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, பசி போன்றவற்றை ஒன்றாகவே எண்ணும் மன உரம், தேவையான நேரத்தில் சட்டையைக் கழற்றுவதுபோல உடலை விட்டு உயிரைப் பிரிக்கும் திறம் இவை எல்லாம் ஒருங்கே அமையப்பெற்றவர்கள் சித்தர்கள்.

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி அகத்திலே சிவத்தைக் கண்டவர்களாகிய யோக நெறியில் நின்று, மானுடத்தை செய்வித்தனர். இவர்களின் அட்டாங்க யோகம் மனிதனுடைய அளப்பரிய ஆற்றலை வெளிப்படுத்துவதற்கு உதவுவதாகும்.

### குறியீட்டுச் சொற்கள்

சித்தர் பாடல்கள் குறியீட்டுச் சொற்களால் ஆனவை. எல்லாத் துறைகளிலும் இக்குறியீட்டுச் சொற்கள் (Technical terms) உள்ளன. ஒரு குழுவிற்குத் தெரிந்த ஒரு குறியீட்டுச்சொல் மற்றொரு குழுவிற்குத் தெரிவதில்லை. மரபிலக்கணத்தில் இதை குழுஉக்குறி என்பர். மாணவப் பருவத்திடையேயும் இன்று வழக்கில் இத்தகைய சொற்கள் (Code words) உள்ளன. அவர்களோடு நெருக்கமானவர்களுக்கு அதன் பொருள் எளிதில் புரிந்துவிடும். அது போலவே சித்தர்களின் குறியீட்டுச் சொற்கள் படிக்கப் படிக்க எல்லோருக்கும் தெரிந்த பழகு தமிழ்ச் சொற்களாகிவிடும்! 'சித்திரமும் கைப்பழக்கம்' 'செந்தமிழும் நாப்பழக்கம்' என்பதற்கேற்ப உண்மைப் பொருளை உணர்ந்துகொண்டால் அதனுடைய பொருள் எளிதில் வசப்பட்டுவிடும்.

இத்தகைய குறியீட்டுச் சொற்களை மானுடத்தின் நன்மை கருதியே அவர்கள் பயன்படுத்துவதாகக் கூறுகின்றனர். அரைகுறை அறிவுள்ளவர்கள் தவறாகப் புரிந்துகொண்டால் மாண்டவர் உயிர் பிழைப்பர், அதனால் இப்பூமியில் இடம் இல்லாமல் போய்விடும் என்றே இவ்வாறு மறைபொருளில் பாடி வைத்துள்ளதாகக் குறிப்பிடுகின்றனர்.

'விதியாளி வந்தானாகில் கூப்பிட்டுத் தான்
கொடுப்பர்
சித்தர்தானே' - எனப்புலிப்பாணி வைத்தியம்

கூறுகின்றது. ஆர்வமும், மனித மேம்பாட்டில் அக்கறை உள்ளவர்களும் வந்தால் அவர்களுக்கு எளிதில் விளங்கும் என்பதையே இவ்வாறு குறிக்கின்றனர்.

### அட்டாங்க யோகம்

சித்தர்கள் எட்டுவகையான யோக நெறிகளைக் குறிக்கின்றனர். மனிதனுடைய வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் வழிகளாகும். இவ்யோக நெறிகள், எப்படியும் வாழலாம் என்றில்லாது, இப்படித்தான் வாழவேண்டும் என்ற நெறியினை விளக்குகின்றன.

இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன அட்டாங்க யோகங்கள் ஆகும்.

### இயமம்

தீதகற்றலாகிய நெறி இயமத்தின் பாற்படும். கொல்லாமை, பொய்கூறாமை, . எல்லோராலும் மதிக்கப்படுதல், நல்லவனாக இருத்தல், அடக்கமுடைமை, நடுநிலைமையோடு இருத்தல், பகுத்து உண்ணுதல், குற்றமில்லாதவன், களவுகள், காமம் இல்லாதவன் என்னும் பதினொரு அருஞ்செயல்களை மேற்கொண்டொழுகுதல் இயமத்தின் பாற்படும். இத்தகைய பதினொரு நெறிகளை ஒருவன் தன் வாழ்க்கையில் தவறாது கடைப்பிடித்தான் எனின் அவன் இயமம் என்னும் யோகத்தின் பாற்பட்டவனாவான்.

### நியமம்

நன்றாற்றலாகிய நெறி.

நல்ல செயல்களை ஆற்றுதலாகும். நல்லதையே நினைத்து, நல்லதையே பேசி, நல்லதையே செய்தலாகிய நெறி.

அகப்புறத்தூய்மை, அருள், ஊண் முதலியன சுருக்கல், சிக்கன வாழ்வு, பொறுமை, செம்மை, வாய்மை, மானம், காமமகற்றல், களவகற்றல், கொலை அகற்றல் என்ற நன்றாற்றலாகும். தவம் செய்தல், இறைநாமத்தைச் சொல்லுதல், இறைவனை நினைத்தலாகிய மகிழ்வு, சிவனடியாருக்கு உவந்து கொடுக்கும் தானம், சிவனை வழிபடும் விரதம் சித்தாந்த நூல்களை ஓதுதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், நாடல் முதலியன செய்தல் ஆகியன வும் நியமத்தின் பாற்படும்.

**ஆதனம்**

பல்வேறு யோகாசன நிலைகளைக் கூறுவது பத்மாசானம், பத்ராசனம், குக்குட ஆசனம், சிங்கா தனம் என்பன போன்ற பல்வேறு ஆசனங்களை இன்றைய யோகநெறி ஆசிரியர்கள் கூறுகின்றனர். உடலின் தளர்வினை நீக்கி, புத்துணர்ச்சி பெறச் செய்வதற்கு இவ் ஆதனங்களின் துணைமிகவும் தேவை. இன்றைய இயந்திர உலகத்தில் மனிதனைப் புதுப்பிக்கும் வேலையினை இவ்ஆசனங்கள் செய் கின்றன. நன்முறையான யோகாசனம் பல்வேறு நோய்களைத் திர்க்கும் மருந்தாகவும் விளங்குகின்றன. மருத்துவத்தினால் தீர்க்கமுடியாத பல்வேறு நோய் கள் ஒவ்வொரு உறுப்பிற்கும் ஏற்ற ஆசனங்களைச் செய்வதன் மூலம் தீர்க்கப்படுகின்றன என்று இன்றைய மருத்துவர்கள் ஒத்துக்கொள்கின்றனர். ஆசனங்களை மான்தோலில் உட்கார்ந்து செய்தால் ஞானம் உண் டாகும் என்றும், புலித்தோலில் உட்கார்ந்து செய்தால் செல்வம் கிட்டும் என்றும், தர்ப்பாசனம் மோட்சத்தைத் தரும் என்றும், சித்திரக் கம்பளம் நன்மை என்றும் வஸ்திரம் தீமை நீங்கல் என்றும் நிஜானந்தபோதம் கூறுகின்றது.

**பத்மாசனம் :** அடிவயிற்றுப் பகுதிக்கு இரத்த ஓட்டம் அதிகமாகும்.

**உத்தித பத்மாசனம்:** தொந்தி கரையும், ஜீரண உறுப்புகள் நன்கு வேலைசெய்யும், புஜம் தோள் பட்டை பலம்பெறும். அஜீரணம். மலச்சிக்கல் தீரும். நீரிழிவு நோய்க்குச் சிறந்த ஆசனம்.

பெண்கள் இவ்வாசனம் செய்வதால் கர்ப்பப்பை கோளாறுகள் நீங்கும். குழந்தை பெற்றபின் வயிற்றுச் சுருக் கமும், வயிறு தொங்கல் நீக்கம் பெற்று வயிறு அழகு பெறும்.

**தனுராசனம்:** அஜீரணம், வயிற்றுவலி, வாய் துர் நாற்றம், வயிற்றுக் கொழுப்பு, ஊளைச் சதை நீங்கும், சிறுநீர்க் கருவி கள், ஆண்களின் டெஸ்பீஸ், பெண் களின் ஓவரி கர்ப்பப்பை நல்ல இரத்த ஓட்டம் ஏற்பட்டு பலம் பெறும். இளமைப் பொலிவு உண் டாகும். பெண்களின் மாதவிடாய் சம்பந்தமான நோய்கள் நீங்கும்.

யோக பயிற்சி செய்யும் ஆசிரியர்கள் இத்தகைய பயிற்சிகளை விளக்கிச் சொல்லிக் கொடுக் கிறார்கள். இத்தகைய ஆசிரியர்கள் மூலமே நம் உடல் வாகிற்குத் தேவையான ஆசனங்களைக் கற்றுக் கொண்டு செய்வது சிறப்பாகும். 'உடலினை உறுதி செய்' என்பது பாரதியின் வாக்கு. இயமம், நியமம், ஆசனம் இவை மூன்றும் உடல் பயிற்சியாகும். மனத்தின்பாங்கும் சிறிதுள்ளது.

**பிராணாயாமம்**

வளிநிலை, வாசியோகம் என்றும் கூறுவர். நம்முடைய உடலில் 10 நாடிகள் உள்ளன. அவற்றுள் மிகவும் முக்கியமானவை மூன்று. அவை இடகலை, பிங்கலை, சுழுமுனை என்பனவாகும்.

**இடகலை:** இடமூக்கில் நடக்கும் மூச்சு, இதைச் சந்திரநாடி என்றும் சக்திநாடி என்றும் கூறுவர்.

**பிங்கலை:** வலமூக்கில் நடக்கும் மூச்சு, இது சூரியநாடி என்றும், சிவன்நாடி என்றும் கூறுவர்.

**சுழுமுனை:** இதை 'சுசும்னா' நாடி என்பர், இது மூலதாரம் முதல் தலையிலுள்ள பிரம்ம கபாலம் வரையில் திரியும் நாடி. குதத்திலிருந்து (மலவாய்) பின் புறமாக முதுகுத்தண்டு வழியே வரும்.

இந்த மூன்று நாடிகளும் ஆறு ஆதாரங்களைக் கடந்து முட்டிநிற்கும். இவை மூன்றும் சேருமிடம் நெற்றிப் புருவ நடுவாகும். இதையே 'திரிவேணி சங்கமம்' எனக்குறிப்பர். அதுவே சச்சிதானந்தமாகும். (Bliss) மெய்யறிவு காணும் இடமும் இதுவேயாகும்.

நாம் பிராணவாயுவை (ஆக்சிஜன் $O_2$ ) உள்ளிழுத்துக்கரியமிலவாயுவை ($CO_2$ ) வெளியே விடுகிறோம். பிராணாயாமத்தின் மூலம் உள்ளிழுக் கும் காற்றினைச் சேமித்தால் பெரும்பலன் நிச்சயம். இதற்கு மூன்று செயல்முறைகள் உள்ளன.

பூரகம் - காற்றை உள்ளே இழுப்பது (Inhaling)

இரேசகம் - காற்றை வெளியே விடுவது (Exhaling)

கும்பகம் - காற்றை உள்ளே நிறுத்துவது (Oxygen preserving)

வாரத்தின் ஏழு நாட்களிலும் இந்நாடிகள் மாறிமாறி நடைபெறும்.

ஞாயிறு, செவ்வாய், சனி - சூரியகலை
வெள்ளி, திங்கள், புதன் - சந்திரகலை
அமரபட்சம் வியாழன் - சந்திரகலை
பூர்வபட்சம் வியாழன் - சூரியகலை

இம்முறையே நாடிகள் நடக்க வேண்டும். அவ்வாறு நடந்தால் காரிய சித்தியாகும். பேதமாய் சூரியன் நடக்க வேண்டிய தினம் சந்திரனும் சந்திரன் நடக்கவேண்டிய தினம் சூரியனும் நடந்தால் அடியிற் காணும் பலன் நடக்கும்.

ஞாயிறு சந்திரன் - சளி, இருமல்

திங்கள் சூரியன் - சலதோஷம், சுற்றத்தார்க்குக் கேடு.

செவ்வாய் சந்திரன் - சுரம், சண்டை, சாவு

புதன் சூரியன் - நீரேற்றம், தலைக்குத்தல்

வளர்பிறை வியாழன் - சந்திரன் தேகநோய்

வெள்ளி சூரியன் - கண்காது நோய் வெளியூர்ப் பிரயாணம்

சனி சந்திரன், சீதன சன்னி.

மூக்கிற்கு அடியில் ஆள்காட்டி விரலை படுக்கை வசத்தில் வைத்து காற்றை வெளியே விடும்பொழுது எந்தப் பக்கமாகவரும் காற்று வலுவுள்ளதாக இருக் கின்றது என்பதைப் பார்த்து அந்த நாடி நடப்பதாகக் கொள்ளவேண்டும். வாசி யோகத்தை முறையாகக் குருவின் மூலம் பயின்று பயிற்சி செய்தல் நலம் பயக்கும். இப்பயிற்சியைத் தினமும் அதிகாலை யில் 31/2 - 5 மணி அளவில் செய்தால் மிகவும் நன்மையாகும். நுரையீரல் தொடர்பான நோய்களுக் கும், சளி தொடர்பான நோய்களுக்கும் நன்மருந்தாக அமையும்.

இடகலை, பிங்கலை சுழுமுனையை - தாரை, சங்கு, குதிரை என்றெல்லாம் குறியீட்டுச் சொற்களால் சித்தர்கள் குறிப்பதுண்டு.

குதிரை - பிராணவாயு என்றும் சில இடங் களில் பொருள்படும்.

'சங்கிரண்டு தாரை ஒன்று சன்னல் பின்னல் ஆகையால்
மங்கி மாளுதே உலகில் மானிடங்கள் எத்தனை?
சங்கிரண்டையுந் தவிர்த்து தாரை ஊத வல்லீரேல்
கொங்கை மங்கை பங்கரோடு கூடி வாழ்தல் ஆகுமே'

என்ற சிவவாக்கியர் பாடல் இக்குறியீட்டை உணர்த்து கின்றது.

சங்கிரண்டு - இடகலை பிங்கலை
தாரை - சுழுமுனை
கொங்கை மங்கை பங்கர் - சிவபெருமான்

பிராணனாகிய காற்றினை இடகலை, பிங்கலை இரண்டிலும் செலுத்தாமல் சுழுமுனையில் செலுத்தி அதை ஏற்ற வல்லவர்கள் உமையம்மையைத் தன் உடலில் பாதியாகக் கொண்ட சிவனோடு இரண்டறக்கலக்கும் அத்வைத நிலை கிட்டும் என்பது விளக்கமாகும்.

காற்றை உள்ளிழுப்பதற்கும் வெளியே விடுவதற்கும், நிறுத்துவதற்கும் மாத்திரை கணக் கினைத் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

செந்தமிழ்த் திருமாமறை முடிவினை நான்குமுறை
கணித்துத் தூயகாற்றை உள்வாங்குதல் (பூரகம்) வேண்டும் (சிவசிவ நான்கு மாத்திரை)
அதுபோல் சிவசிவ என்று 16 முறை கணித்து இரண்டு மூக்கையும் அடைத்து உள்நிறுத்தல் (கும்பகம்)

செய்யவேண்டும். பின் சிவசிவ என்று எட்டு முறை கணித்து வலமூக்கைத் திறந்து வெளிவிடுதல் (இரேசகம்) வேண்டும். மாறிமாறிச் செய்ய வேண்டும். சிவசிவ - நான்கு மாத்திரை இம்முறையே இட மூக்கிலும் பயிலவேண்டும். இப்பயிற்சி குருவின் மூலமே கற்பிக்கப்படவேண்டும். சொந்த முயற்சியில் செய்தால் தீய விளைவுகளை ஏற்படுத்தும்.

சாதாரணமாக ஒரு மூக்கில் காற்றை உள் வாங்கி மற்றொரு மூக்கின் வழியாக வெளிவிடும் பயிற்சியே நல்ல பயனை அளிக்கும். இது அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிப்பதற்குரிய எளிய பயிற்சியாகும்.

### பிரத்தியாகாரம்

அகத்தவப் பயிற்சி முறையான் சிவபெரு மானை உணர்வின்கண் கருத்துற வைப்பர்.

ஆருயிரை மாயையினின்றும் பிரித்துச் சிவத்துடன் சேர்க்க நினைத்தல், சேருமாறு அகத்தவத்தால் கரைதல், உணர்வினுள் நோக்கல் ஆகிய அருஞ் செயல்கள் தொகைநிலையாகிய பிரத்தியாகாரம் ஆகும்.

### தாரணை

பொறைநிலையாகிய தாரணை என்பது மனத்தினை ஒருவழிநிறுப்பதாகும். புலன்களைப் பற்றிக் கொள்ளும் பண்புவாய்ந்த மனத்தினைத் திருவருள் நினைவால் புலன்வழிப் புகாவிடாதும் கீழ் நோக்கிவிடாதும் புரிந்து கட்டுவதாகிய அடக்குதலைச் செய்யவேணடும். அங்ஙனம் அடக்கியபின் உணர்வுக் கண் கொண்டு நடுநாடி வழியாகத் திருவருள் வெளியினை உற்றுநோக்குதல் வேண்டும். மண் முதலான ஐம் பூதங்களை ஐந்து புலன்களில் ஒடுக்கி, புலன்களை அந்தக்கரணம் நான்கில் ஒடுக்கி( மனம், புத்தி, அகங்காரம், சித்தம்) அந்தக்கரணங்களை மாயையில் ஒடுக்கி, மாயையை ஆன்மாவில், ஆன்மாவைச் சிவத்தில் ஒடுக்கல்.

ஒன்றினுள் ஒன்று ஒடுங்கி இறுதியில் ஆன்மா சிவத்தோடு ஐக்கியமாகும் நிலையே தாரணையாகும்.

### தியானம்

ஆருயிர் நீங்கா நினைவுடன் ஓங்கும் பண்பு தியானமாகும். நாட்டம் இரண்டினையும் புருவ நடுவிற்கு நேராம் மூக்குநுனியில் வைத்தல் வேண்டும். அங்ஙனம் வைத்து உயிர்ப்படக்கி அசைவறநிற்கத் திருவருள் ஒளி அகத்தே காணப்படும். ஒளி காணப் படவே உடம்புக்கு எவ்வகை வாட்டமுமில்லை. மனையாகிய உடம்பிற்கும் அழிவு ஏற்படாது. உயிர்ப்புஞ் செல்வதாகிய ஓட்டமும் இல்லை. புறப்புலன்கள் மாட்டுச் செல்லும் உணர்வுமில்லை. தன்முனைப்பில்லை. எவ்வகை வேட்கையுமில்லை. அவனே சிவனாவன்.

ஓட்டம் - உயிர்மூச்சின் இயக்கம், உணர்வு - உலக நாட்டம். மனை- உடல். தனிக்கட்டுரை காணும் சிறப்புடையது தியானமாகும்.

### சமாதி

தீதகற்றல், நன்றாற்றல் ஆகிய இயம நியமமுறைகளால் செயலறலாகிய சமாதியுண்டாகும். அதன் இயல்பினைக் கூறக் கேட்கில் அவற்றான் எட்டுச்சித்தியும் உண்டாகும். திருவடி நிறைவில் அடங்கி ஆவியும் முழுமுதற் சிவனருளால் சிவமாக்கப் பெற்ற நிலையில் சாரூப நிலை ஆகும்.

### அட்டமாசித்திகள்

அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டு சித்திகள் உள்ளன.

### அணிமா

தோற்றத்தில் பெரிய பொருளை மிகச் சிறியதாக ஆக்குவது. புராணத்தில் இதற்குப் பிருங்கி முனிவர் சிவனை மட்டும் வலம்வருதல் வேண்டும் என்று சிறுவண்டாக உருமாறியது.

### மகிமா

தோற்றத்தில் மிகச்சிறிய பொருளை மிகப் பெரிய பொருளாக ஆக்குவது. புராணத்தில் திருமால் வாமனாக இருந்து மூன்றடி நிலம் கேட்டு விசுவ ரூபம் எடுத்ததையும், பாரதப் போர் நடந்தபோது அருச்சுனனுக்குத் தன் மிகப்பெரிய வடிவத்தைக் காட்டியதையும் சான்றாகக் கூறலாம்.

### லகிமா

சுமையுள்ள பொருளை மிகவும் லேசானதாக ஆக்குவது. திருநாவுக்கரசைக் கல்லில் கட்டிக் கடலில் இட்டபோது அவர் 'நமசிவாய' மந்திரத்தைக் கூறியதும் அக்கல் மிதவையாகி அவரைக் கரை சேர்த்தது.

### கரிமா

லேசான பொருளை மிகவும் சுமையுடைய பொருளாக ஆக்குவது. சிபிச்சக்கரவர்த்தி புறாவின் எடைக்காகத் தன் தசையைக் கொடுக்க முயன்று இறுதியில் தானே ஏறித் துலாக்கோலில் உட்கார எடை சமமானது.

### பிராத்தி

எவ்வுலகத்தும் எவ்விடத்தும் தடையின்றிச் சஞ்சரித்தல். சூரன், இராவணன், முதலியோர் நினைத்த மாத்திரத்தில் நினைத்தஇடம் செல்லும் வல்லமை பெற்றிருந்தது. திருவிளையாடல் புராணத்தில் 'எல்லாம் வல்ல சித்தரான படலத்தில்' சிவன் நான்கு திசையிலும் ஒரே சமயத்தில் தோன்றியது.

### பிரகாமியம்

கூடுவிட்டு கூடுபாய்தல். மூலன் இறந்த இடையன் உடலில் புகுந்து எழுந்தது.

**ஈசத்துவம்**

ஐந்து தொழிலை நடத்துதல் திருஞான சம்பந்தர் பூம்பாவைக்கு உயிர் கொடுத்தெழுப்பினார். கோரக்கச்சித்தர் 108 துண்டுளாகச் சிதறிய உடலை ஒன்றாக்கி உயிரூட்டினார்.

**வசித்துவம்**

எழுவகைத் தோற்றமாகிய தேவர், மானிடர், மிருகம், பறப்பன, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் ஆகியவற்றை வசப்படுத்துதல். அப்பர் தன்னைக் கொல்ல வந்த யானையை நிறுத்தினார். இராமர் ஆலமரத்தில் இருந்து ஒலி செய்து கொண்டிருந்த பறவைகளைக் கைச் சைகை செய்து நிறுத்தினார். சுந்தரர் இறையவனையே தூதாக அனுப்பினார்.

இத்தகையோர் யோகப்பயிற்சியினால் சித்தத்தை அசையாது இருக்கச் செய்து சிவத்தோடு இரண்டறக் கலப்பர். குளத்தில் அலைகள் அடங்கியபின் அதன்மேற்புறம் தெளிவடைய அடியில் இருக்கும் பொருள்கள் தோன்றுவதுபோல், சலனமில்லாத சித்தத்தில் சிவம் தோன்றும் என்பதே சித்தர்களின் யோக நெறியின் பலனாகும்.

இத்தகைய அசையா மனத்திலேதான் பெரும் அறிவியல் கண்டுபிடிப்புகள் நிகழ்கின்றன. இதைப் பல அறிவியலறிஞர்களும் தம்வாழ்வில் உணர்ந் ததை உள்ளவாறு கூறியிருக்கின்றனர். எனவே மானுடத்தின் உயர்வு இத்தகைய யோக நெறியைப் பின்பற்றுவதாலேயே அமையும் என்பது தெளிவு.

★★★

## நூல் மதிப்புரை

நூல் பெயர் : **காற்றில் கமழ்ந்த கவிதைகள்**
நூலாசிரியர் : **கோவூர் இசைதாசன்**
வெளியீடு : எழில் பதிப்பகம்
82B, கண்ணகி வீதி, கோவூர்,
மாங்காடு வழி 602 101
பக்கங்கள் : 128
விலை : **ரூ.30.00**

1965 ஆம் ஆண்டிலிருந்து பற்பல நேரங்களில் வானொலி வாயிலாக தாம் வழங்கிய சமுதாயம் பயன்கொள்ளத்தக்க பயன்பாடு மிக்க கவிதை களைத் தொகுத்து வழங்கியிருக்கிறார் ''கவிஞர் திலகம்'' முதலான பல விருதுக் பெற்றுள்ள கோவூர் இசைதான் அவர்கள்.

இனிமையும், நயமும் இணைந்து கற்பதற்குக் களிபேருவகையாகும் கவிதை மலர்களில் சான்றிற்கு ஒரு கவிதை இங்குக் காட்டப்படுகிறது.

''கொடியினிலே பூவாத ஒரு பூ; பெண்கள்
கூந்தலிலே சூடாத சிறுபூ; மண்ணின்
மடிமீது வீழ்ந்துவிட்டே உலராத பூ
மாலையிலும் காலையிலும் வாடாத பூ
படியாதார் முடியாதார் அனைவருக்கும்
பயன்தந்தே மகிழ்வூட்டும் இப்பூ; எந்தச்
செடியினிலும் பூவாமல் சிக்கனத்தாய்
சீருடனே பெற்றிட்ட சிறுசேமிப்பு''

இத்தகைய கவிமலர்கள் மணக்கும் இந்நூலைச் சிக்கனம் கருதாமல் வாங்கி ஒவ்வொருவரும் படித்துப் பயன்பெறலாம்.

★★★

நூல் பெயர் : **கோதையின் காதல் ஓவியம் பாகம் I & II**
நூலாசிரியர் : **கவிஞர் வி.மு. உலகநாதன்**
வெளியீடு : வாசுகி பதிப்பகம்
69, தொட்டிக்கலைக் குமரப்ப
முதலித்தெரு, சூளை
சென்னை - 600 002.
பக்கம் : முதல் பாகம் பக்: 224
இரண்டாம்பாகம் பக்: 230
விலை : முதல் பாகம் **ரூ 32.00**
இரண்டாம் பாகம் **ரூ 36.00**

ஆண்டாள் அருளிய நாச்சியார்திருமொழியின் விளக்கமாக இச்சீர்மிகு நூல்கள் அமைந்து விளங்கு கின்றன.

கண்ணன் கைச்சங்கம் பெற்ற பெருமையைப் பக்திச்சுவை நனி சொட்டச்சொட்ட நூலாசிரியர் விவரித்திருக்கும் பாங்கு பன்முறை படித்து மகிழ்ந்து பரவசப்படத் தக்கதாய் அமைந்து விளங்குகின்றது.

''சங்கரையா உன் செல்வம் சால அழகியதே''
''உலகளந்தான் வாயமுதம் சுவைத்த
ஒன்சங்கே''
''செல்வப் பெருங் சங்கே''

என வரும்பாடல் விளக்கங்களைப் பயின்று பயன் பெற இந்நூல் அனைவரும் வாங்கிப் பயில வேண்டிய நூலாகும்.

★★★

# அன்பே சிவம்! தொண்டே சிவம்!

— முனைவர் கா.பெ.சந்திரசேகரன் எம்.ஏ, பி.எச்டி.

## சமய வாழ்வு

'தான் உண்டு; தன்குடும்பம் உண்டு; சம்பாத்தியமும் சௌகர்யமும் உண்டு; சிலபோழ்து கடவுளை நினைப்பதும் உண்டு' என்பவை இக்கால மக்களின் நடைமுறைவாழ்வு. சமயச்சார்புடையோருள்ளும், '**நான்** பிறப்பாலும் பெயராலும் சைவர்; (அ) வைணவர்; **நான்** உண்ணும் உணவில் கூட தூய சைவம்; **நாங்கள்** உடுக்கும் உடையுடன் ஒப்பனையாலும் சிவ - வைணவ சம்பந்தமுடையவர்; **நான்** வகிக்கும் பதவி அறங்காவலர்', என்று **நான்** (அகந்தை)' அகலாமலேயே தமது சமயத் தொடர்புடைய செல்வாக்கையும் விதந்தோதுவார் பலர். சமய வாழ்வின் அடித்தளம் யாது? சமயக் கொள்கை யாது? என்பனவற்றை நினைத்துப் பார்க்கவும் நேரமில்லாத பல்வேறு வசதிகள் நிறைந்த பரந்த உலகம் இன்று. 'அடியார்க்கும் அடியேன்! தாசானு தாசன்! தொண்டர்க்கும் தொண்டன்! என்ற சமய வாழ்வின் அடித்தளமானது, **யான்** என்னும் அகப்பற்றும், **எனது** என்னும் புறப்பற்றும் (அகங்காரம் + மமகாரம்) மீதூரப் பெற்று பல்வேறு பாகுபாடுகளுக்குள்ளானது. தன்னலம், தற்பெருமை, புறத்தோற்றம், செல்வாக்கு, நடுவிகந்த ஆக்கத்தில் நாட்டம் ஆகிய பண்புகள் இக்காலக் கடவுள் வழிபாட்டில் அர்ச்சனைப் பூக்களாயின. உயர்வு தாழ்வு மனப்பான்மைகளால் ஆண்டவன் சந்நிதானத்திலும் சமத்துவம் என்பது அரிதாகிவிட்டது.

## சமயவாழ்வின் நோக்கம்

சமுதாயத்தின் அடிமட்டத்தில் உழல்வோர்கூட, அன்பு உள்ளத்தால் - ஆன்மநேயத்தால் - அருந்தொண்டால் உன்னத நிலைபெறலாம்; உயர்ந்து ஒளிரலாம் என்பதே சைவ-வைணவப் பெரியோர்கள் நமக்குக் காட்டிய சமய வாழ்வாகும். ஜான்ரஸ்கின் எழுதிய அன்டு தி லாஸ்ட் (Unto The Last) என்னும் நூலால் கவரப்பட்ட காந்தியடிகளும் சமூகத்தின் கிழ்த்தளத்து மக்களும் மேம்பாடடைய வேண்டும் என்று **கடையனுக்கும் கடைத் தேற்றம் (அ) கடையனுக்கும் கதிமோட்சம்** காண்பதை இலட்சியமாகக் கொண்டிருந்தார். மகாகவி பாரதியார்,

> **''உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்**
> **வாக்கினிலே ஒளியுண்டாம்''**

என்றுகூறி, அதனால்

> **''பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்**
> **விழிபெற்றுப் பதவி கொள்வார்''**

என்று புண்பட்ட நிலையினர்க்கும் புத்துணர்ச்சி புகட்டினார்.

'தூயஉள்ளம்; அதில் துலங்கும் அன்பு; எள்ளளவும் பிறஉயிர்களிடம் பேதம் கொள்ளாமல் நேசிக்கும் ஆன்மநேயம் ஆகியன நிரம்பிய மனிதர் மனதில்தான் இறைவன் திருநடம் புரிகின்றான். அத்தகு மனிதரை நான், கடவுளாகவே பாவித்து வணங்குகிறேன்' என்பது அருட்பிரகாசவள்ளலார் வாக்கு. 'அங்கமெலாம் குறைந்து அழுகும் தொழுநோயராய் இருந்தாலென்ன? ஆவுரித்துத் தின்றுழலும் புலையராயிருந்தாலென்ன? அவர்கள் சிவநேயச் செல்வரெனில் அவரே யாம் வணங்கும் கடவுளாவார்.' என்பது அப்பர் பெருமானின் அமுத வாக்கு. 'எவனொருவன் நாயிறைச்சி தின்பவனாயினும் என்னை விருப்பத்தோடே பூசிப்பானாயின் அவன் எம்மால் விரும்பத்தக்கவனாவான்' என்பது கண்ணபிரானின் திருவாக்கு என்று ஸ்ரீவசனபூஷணம் கூறும்.

எனவே சமய வாழ்வு என்பது, ஆசாரம் அனுட்டிப்பதிலும், கோசாரம் கூறுவதிலும், ஆண்டவன் சந்நிதானத்தில் ஆறுகாலபூஜை நிகழ்த்துவதிலும், நித்திய-நைமித்திக கருமங்களைக் கடைப்பிடிப்பதிலும் நிறைவு பெறுவதில்லை. அது சமுதாயத்தின் அடிமட்டத்தில் அல்லல் உறுவோர், தாழ்த்தப்பட்டவர் என்று தாழ்வுணர்ச்சியில் வதிவோர், சமூகத்தால் ஒடுக்கப்பட்டோர், ஒதுக்கப்பட்டோர், பாமரர் மற்றும் நலிந்த பிரிவினர் எனும் பல்வேறு தரத்தினரிடத்தும் அன்புநெறி கொண்டு அரவணைத்துச் செல்வதே சமயவாழ்வின் நோக்கமும் திருப்பணியாகும். 'நாம், படமாடும்கோயில்கொண்ட பகவானுக்கு அளிப்பது எதுவும் ஏழை எளியவர்க்குப் போய்ச்சேராது. ஆனால், நடமாடும் கோயிலான ஏழைகளுக்கு வழங்குவனயாவும் பகவானுக்குப் போய்சேரும்' என்பது திருமூலரின் அருள்வாக்கு.

இக்கால அறிஞரும். ''ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்.'' என்றார்.

**அன்பே சிவம்!**

சிவபெருமானைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவ சமயம். சைவ சமயத்தின் உயிர்நாடியாகத் திகழ்வது அன்பு; அதனால் **'அன்பே சிவம்'** என்பது சைவக்கொள்கை. பிற சமயங்களிலும் அன்பே கடவுள் (God is Love) எனும் கருத்தைக் காணலாம்.

அன்பு என்பது மனித இனத்துக்கு அடிப்படையாய் இருக்கவேண்டிய பண்பு. மனிதநேயத்தில் மலரும் அன்பானது, தாய்,தந்தை, மனைவி மக்களிடம் பேரன்பாக (காதல்) விளங்குகின்றது. பெற்ற தாயினும் ஆயின செய்யும் அது ஆன்மீகம் கலந்த நிலையில், இறையன்பாக(பக்தி) வெளிப்படுகின்றது. இறையன்பர்கள் பலர், தம்மைத் தலைவியாகப் பாவித்து, இறைவன்மீது இன்பப் பொருள் குறித்துப்பாடி இறையனுபவம் பெற்றனர் என்பதைப்பக்தி இலக்கியங்களில் காணலாம்.

**திருவள்ளுவர் கூறும் அன்பு**

அன்பிலார் எல்லாம் தமக்கே உரியர்;
அன்புடையவர்கள்தம் உடம்பாலும் பிறருக்கு உரியர்'

என்று கூறும் வள்ளுவர், அன்பு இல்லாத மனிதன், வெறும் எலும்பும்தோலும் போர்த்திய உடம்பினன் என்பார்.

''அன்பின்வழியது உயிர்நிலை; அஃது இல்லார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு''

அன்புஇல்லாநெஞ்சகத்தில் அருள்சுரக்காது. 'அன்பு என்னும் தாயிடம் பிறக்கும் குழந்தையே அருள்' என்பதை

''அருள் என்னும் அன்பு ஈன்குழவி''

என்று அவர் மேலும் தெளிவாக்கியுள்ளார்.

**வள்ளலார்**

அன்பு உள்ளத்தால் மட்டுமே நம்மால் பிற உயிர்களின் துன்பதுயரங்களை உணரமுடியும்; வள்ளலார்,

''வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்
வாடினேன்''

என்றுபாடியது, அஃறிணைப் பொருளுக்கும் இரக்கம் கொள்ளும் அருள் சுரந்த அன்புள்ளத்தைக் காட்டுவதேயாகும். மேலும் அவர்,

''எல்லா உயிர்களும் இன்புற்ற வாழ்க!''
என்று அருளி,
''அன்பெனும் பிடியுள் அகப்படுமலையே!''

என்று தம் இறையனுபவத்தைக் கூறுவதையும் காணலாம்.

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம்,

''செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலம் கழீஇ **அன்பரொடு மரீஇ**
மாலற **நேயம்** மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே''

என்று ஆன்மாவானது அயராஅன்பில் அரன்கழல் செல்லும்பான்மையை விளக்கும்.

**திருமூலர் திருவாக்கு**

அறுபத்துமூன்று நாயன்மாருள் மூத்தவர் என்று போற்றப்படுபவரும், மூத்த திருப்பதிகம் பாடியவருமான காரைக்காலம்மையார்,

**''பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்.....''**

என்றுபாடுகிறார். நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர்.

**''காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி...''**

என்று இறையன்பை எடுத்தோதுவார். நாயன்மாருள், அன்பேசிவம் என்பதை முதன்முதல் வரையறுத்துக் கூறியவர் திருமூலரேயாவார்.

**''அன்பும் சிவமும் இரண்டுஎன்பர் அறிவு
இலார்:
அன்பேசிவம் ஆவது ஆரும் அறிகிலார்
அன்பேசிவம் ஆவது ஆரும் அறிந்தபின்
அன்பேசிவமாய் அமர்ந்து இருந்தாரே''**

இப்பாடல்வழி, அன்பே சிவம் என்பதும் அன்புநெறியே சைவநெறி என்பதும் தெளிவாகின்றன.

**சாக்கியர் புராணத்தில் சைவநெறி**

அன்பாம் சிவத்தை வழிபடுவோர் எந்த இடத்தில் இருக்கவேண்டும்? என்ன உடை உடுத்த வேண்டும்? எத்தகு உணவை உண்ணவேண்டும்? எத்தொழிலைச்செய்யவேண்டும்? எவருடன் தொடர்பு வேண்டும் (அ)கூடாது! எனும் விதிமுறைகளைச் சைவ சமயம் கட்டாயப்படுத்தவில்லை. அது விரும்புவது: மனமெனும் கோயிலுள் அன்பாம் இறைவன் உறையவேண்டும்; அதுவே சைவமாகும்.

மனக்கோயிலில் அன்புச்சிவம் அமரும்போது மல மாயை விலகும்; தெய்வத்தன்மை திகழும். பெரிய புராண நாயன்மாருள் அரசர் உண்டு; அடிமையும் உண்டு; அந்தணர் உண்டு; அரிசனரும் உண்டு; குயவர், வண்ணார், சேனாதிபதி, சூதர் (மூர்க்க நாயனார்) எனப் பலவகையினர் உண்டு. அவர்கள் செய்யும் தொழில் எதுவாயினும், சிந்தையில் சிவ நேயச் செல்வராய் விளங்கினர் - நாயன்மாராயினர். அவர்தம் திருத்தொண்டைக்கூறும் பெரிய புராணம். சிவநெறிக் கொள்கை யாது? என்னும் கருத்தைக்கூற உரிய இடமாகக் கொண்டது சாக்கியர் புராணமே யாகும். அகச் சமயநெறி நின்ற அறுபத்திரண்டு நாயன்மார் வரலாற்றில் 'இதுதான் சிவநெறி', என்று விளக்க வேண்டிய அவசியம் இல்லை; ஆனால் புறச்சமயநெறி நின்ற சாக்கியர்கூட சிந்தையால் சிவநேயச் செல்வரானார் என்பதை விளக்கும்போது சைவக் கொள்கை வெளிப்படுகின்றது. (சாக்கிய நாயனார் (சாக்கியர்- பௌத்தர்) பிறவிப்பிணியகல, சமய விசாரம் செய்துப் பயனின்றி முடிவில் அதற்குச் சிவநெறியே் சாத்தியமாவது என்பதறிந்தவர்).

பௌத்த சமயத்தவரான சாக்கியர், அச்சமயத் திற்குரிய, உடையும் கோலமும்கொண்டவர். அவர்தம் சமயத்துக்கு மாறான சிவலிங்கத்தின்மீது நாள்தோறும் தவறாமல் கல்லெறிந்து வந்தார். அச்செயல் தூற்றலா? போற்றலா? என்பது வினாவாகவில்லை. அவர் நித்திய நியதியாய் சிந்தையில் சிவத்தை நினைத்திருந்தார். எனவே அவர்செயல் அன்புச்செயலாகும் என்று இறைவன் ஏற்றுக்கொண்டார். ஆதலால் அவர் நாயன்மார் வரிசையில் இடம்பெற்றார். அதுவே சிவநெறி என்பதைச் சேக்கிழார்,

''எந்நிலையில் நின்றாலும் எக்கோலம்
கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை
பொருள்...''

என்று விளக்குகிறார். மேலும் இப்புராணத்தில்தான் செய்வினை, செய்வான், அதன்பயன், அதைக் கொடுப்பான் என நான்கும் சைவநெறி என்று விளக்கம்பெறுகின்றது.

## சிவனடியார் காட்டும் அகம்-புறம்

அன்பே சிவமாய், சிவமே யாவுமாய்க் கொண்டு தொண்டுநெறிபோற்றியது பக்திஇயக்கம். அக்காலத்திற்குப் பின்னரும் அத்தகு சைவநெறி விளக்கம் பெறுவதைப் பட்டினத்தார் பாடலிலும் உவமை நலத்துடன் காணலாம்.

''எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்
பட்டாலும்
முத்தர் மனம் இருக்கும் மோனத்தே-
வித்தகமாய்
காதிவிளையாடிஇரு கைவீசி வந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்''

என்பதுபாடல். தண்ணீர்க்குடம் சுமந்த தையல் ஒருத்தி, மற்றொரு கைவீசிவந்தாலும், வித்தாரமாய் நடந்தாலும், அவள் கவனமுழுதும் இடையில் சுமந் துள்ள நீர்க்குடத்தின் மீதிருப்பதுபோல, சிவநேயச் செல்வர்கள் எத்தொழிலைச் செய்தலும் எந்நிலையில் இருந்தாலும் அவர் தம் சித்தம் சிவன்பாலே இலயித் திருக்கும்' என்பது பொருள். சைவநெறிக்கு மாறாக, புறத்தோற்றத்தால் இறையடியார் போல காட்சிதந்து, உள்ளத்தால் வஞ்சகராய்வாழும் போலிகள் அரும்பு வதைக் கண்ட வள்ளலார்,

''அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த
உலகர்''

என்றும்,

'' உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்.........''

என்றும் பாடுகிறார்.

## இறைவன் விருப்பம் இல்லறமே!

இறைவழிபாடு செய்ய, இறையனுபவம் நுகர, அவன் திருக்காட்சியைக்கண்டு அருளைப் பெற இல்லறம் விலகிய துறவறம் வேண்டுமா? வேண்டாம்! இல்லறமே நல்லறம் என்பது சைவ நெறி! காட்டிற்குச்சென்று தவம் செய்வதைவிட, வீட்டிலிருந்தே ஜெபம் செய்யலாம். இறைவன், கோயிலில் இருந்து அடியார்களுக்குக் காட்சி தர வில்லை. அவர்களின் வீடுதேடிவந்து காட்சி தரு கிறான். மனைவி மகனுடன் சேர்ந்தும் காட்சி தந்துள்ளான். அவன் அடியாரிடம் விரும்பியன: உள்ளத்தில் அன்பும் உதவும் தொண்டுமேயாகும். மற்றபடி, யாவர் எங்கிருந்தாலென்ன? எத் தொழிலைச் செய்தாலென்ன? அவர்தம் சித்தமெலாம் சிவமய மாய் இருந்தால்போதும்; அதுவே சைவம்! அதை விளக்குவதே சைவநூல்கள். நாயன்மார் எத்தகையர்? இல்லறமே நல்லறம் எனக் கொண்டவர்; மனைவி மக்களைத் தொண்டு செய்யப் பணித்தவர்; உட லுறுப்பைத் துணித்தோர்; உறவினரைக் கொன்றோர்; கறியமுது படைத்தோர்; மகவமுது அளித்தோர்; பரத்தையர்பால் சென்றார் எனப் பல்வேறு நிலை யினர் அவர்கள். நாயன்மாருள் மிகப் பலர்

இல்லறம் போற்றியே தம் சிவநேயத்தாலும் திருத் தொண்டாலும் சிவனடியார் ஆயினர். அண்மைக் காலத்திலும் இராமகிருஷ்ண பரமஹம்சர் சாரதா தேவியுடன் வாழ்ந்து மகனாக விளங்கினார். காந்தி யடிகள் கஸ்தூரிபாயுடன் இல்லறம் போற்றி மகாத்மா வாகப் புகழ்பெற்றார். இவர்கள் தத்தம் வாழ் விடத்தையே ஆசிரமமாக்கி அருஞ்சாதனை புரிந் தனர். இந்நாளில் துறவுக்கோலத்தில் ஆசிரமத் திலிருந்து அதையே சுகபோக விடுதியாக்கும் போலி கள் குறித்து செய்தித் தாள்களில் காண்கிறோம். அலைபாயும் மனத்தினரின் துறவுக்கோலமும், அரனடியே சிந்திப்பர் மனத் திட்பமும் பட்டினத்தார் பாடலில் விளக்கம் பெறுகின்றது.

**''காடே இருந்தென்ன? காற்றே புசித்தென்ன?**
**கந்தை சுற்றி**
**ஓடே எடுத்தென்ன? உள்ளன்பு இலாதார்!**
**ஓங்குவிண்ணோர்**
**நாடே இடைமருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்**
**பால்**
**வீடே இருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்பம்**
**மேவுவரே''**

என்பது பாடல்.

'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்'' என்பதற்கேற்ப, சிலர் உளந்தடுமாறி, இல்லறம் நீங்கித் துறவறம்மேவித் துயருறுகின் றனர். அவர்கள் மனம்தேறாமல் வனத்துக்குச்சென்று இளமையை இழந்தனர்; கிழங்குகளைப் புசித்து கிழவர்களாயினர்; இலைகளைத்தின்று சருகுகள் போலாயினர்;வாயுவாகிய காற்றையே நுகர்ந்து வாய்பேசா மவுனியாகிவிட்டனர். இவர்களால் யாருக்கு என்ன பயன்? என்பது மற்றொரு புலவரின் தனிப்பாடல், மனிதனாகப் பிறந்தவன் தனக்கோ, தன்னைச் சார்ந்தவருக்கோ, அல்லது சமுதாயத் துக்கோ பயன்படாவிடில் அது இறைநெறிக்கே மாறானது என்பதே சமய நூல்கள் வழிகாணும் உண்மையாகும்.

**சைவ நெறி**

**உண்மைச் சைவம் என்பது:** உணவில் இல்லை; உடையில் இல்லை; உறைவிடத்தில் இல்லை; உழைக்கும் தொழிலில் இல்லை; அது உண்மையான



உள்ளத்தில் உள்ளது; அல்லும் பகலும் ஆண்ட வனைச் சிந்திக்கும் சிந்தையில் உள்ளது. சிவமாய் விளங்கும் அன்பில் நிலைபெற்றுள்ளது. சிவமாம் அன்பு எத்தகையது? அது சாதி பேதம் கடந்தது; தாழ்ந்த வகுப்பினராய் இருந்தாலும் அவர்தம் திருத் தொண்டால் உயர்குலத்தாரையும் தம்மிடம் வந்து வணங்கச் செய்வது; ஓடும் செம்பொன்னும் சமம் என்று நோக்குவது; அன்பர்களைக் காணும்போது 'அடியார்க்கும் அடியேன்' என்று பணிந்து போற்றுவது; ஆன்மநேயம் கொள்வது; யான், எனது என்னும் செருக்கு இல்லாதது; எல்லா உடைமையும் இறை வனுக்குரியதே என்று பொதுமைநெறி போற்றித் தன்னலம் கொள்ளாதது; உடல், பொருள், ஆன்மா எனும் மூன்றானும் பிறர்க்குத் தொண்டுசெய்வது; தம்மைவிடப் பிறரைப் பெரியாராக மதிப்பது; பிறந் துன்பம் கண்டபோது அதைப் போக்க யாகம் செய்வது; அன்பு நெஞ்சில் அருள் சுரந்த கருணைக் காட்சியை உடையது; பிறவிப்பிணி நீங்கவும், உலகம் உய்யவும் வாழ்ந்து காட்டுவது; அதுவே அன்பு நெறி! அன்பு நெறியே சிவநெறி! சைவநெறியே தொண்டு நெறியாகும்.

★ ★ ★

# சித்திரபுத்திர நாயனார் கதை

— பொன்னம்மாள்

பூலோகத்தைப் படைக்குமுன்னர் இன்னார்க்கு இன்னபணி என்று பணிகள் வகுக்கப்பட்டன. யமனுக்கு தண்டனை கொடுக்கும் தொழில் வழங்கப் பட்டது. ஆனால் சாட்சி வேண்டுமே என யோசித்தார் சிவபெருமான். விநாயகரை அனுப்பலாமென்றால் அப்போதுதான் பாரதம் எழுதி ஓய்ந்திருந்தார். முருகன் முன்கோபக்காரன். பிரணவத்திற்குப் பொருள் தெரிய வில்லையென்று பிரம்மனையே தலையில் குட்டிச் சிறையிலடைத்த தகப்பன் சுவாமியல்லவா!

கைலாசபதி ''பொற்பலகையும், வண்ணங் களும், தூரிகையும் கொண்டு வரப்பணித்தார். அவர் கேட்டதெல்லாம் கொண்டு வந்து தந்தாள் உமா தேவி. பச்சை, நீலம், மஞ்சள், வெண்மை, சிவப்பு என ஐந்து நிறம் கொண்டு தன்னைப் போலவே ஒரு அழகிய உருவம் வரைந்தார்.

''தேவி...... சித்திரம் எப்படி இருக்கிறது?'' என்றார். ''அழகாகத்தான் இருக்கிறது, வலது கையில் தங்க நிற எழுத்தாணி: இடதுகையில் ஓலைச் சுவடி....... என்ன செய்யப்போகிறான் உங்கள் சித்திரத்துப்புத்திரன்?'' என்று கேட்டாள் சக்தி.

'நம்புத்திரன்' என்று சக்தியின் வார்த்தை களைத் திருத்தினார் ஈசன்.

''விநாயகரை நீ உருவாக்கினாய்! நான் தலையைக் கொய்து யானைத் தலையைப் பொருத்தி னேன். சண்முகனை நீ சரவணப் பொய்கையில் சேர்த்தணைத்தாய். அவன் ஆறுமுகனான். உன் அருள் பார்வை பட்டால்தான் இவனும் வெளிவருவான். இன்று ஞாயிற்றுக்கிழமை. சூரியபலம் மிகுந்த நாள். கண்பார்வை கூர்மையிருந்தால் தான் கணக்கெழுத முடியும். சித்திரை மாதம் சூரியன் உச்சமான சீர்பெற்ற மாதம். சித்திரை நட்சத்திரம் கன்யா ராசிக்குரியது. அதில் பிறந்தவன் கணக்கில் வல்லவனாயிருப்பான். பௌர்ணமி தாயான உனக்குரிய நாள். இதுவே நல்ல லக்னம். கூப்பிடு'' என்றார்.

கருணையைக் கண்களில் தேக்கி ''கண் மணியே, வா'' என்றாள் அன்னை பராசக்தி.

பொற்பலகையிலிருந்து, வெளியே வந்த புதல்வன் உலக மாதா பிதாவாகிய பார்வதி, பரமேசுவரர்களின் பாதங்களை பவ்வியமாக பணிந்து கைகட்டி வாய்பொத்தி நின்றான்.

சித்ரகுப்தா... ஆம்: அதுதான் இனி உன் பெயர். சிரஞ்சீவியாய் ஜீவராசிகளின் பாப புண்ணிய கணக்கெழுதிக் கொண்டிரு. அன்னை வயிற்றில் கரு உதித்தவுடன் புதிதாய் ஓலைக்கட்டு போட்டுவிடு. சின்ன எழுத்துக்களில் சன்னமான ஓலைகளில் நீ எழுதும் பாவபுண்ணியக்கணக்கு முடிந்து விடு மானால் புண்ணியத்துக்கான புதுக்கட்டு போடலாம். பாவத்துக்கு தண்டனையை பூலோகத்திலேயே அனுபவிக்கட்டும். பூலோக நரகம் முடிந்து மேலுலக நரகம் வரட்டும்.

கைலாயம், வைகுண்டம், சத்யலோகம், சுவர்க்கலோகம், கோலோகம் என்ற எல்லா உலகத்துக் கணக்குகளையும் தனித்தனியே எழுது. இத்தனை நாள், பாபம், இத்தனை நாள் புண்ணியம் என்று வகை வகுத்து எழுது. யார் யார் எங்கெங்கே எத்தனை நாள் கழித்துப்பிறக்கவேண்டும் என்று பிரம்மனிடம் கேட்டறிந்து குறித்துக்கொள்'' என்று ஈசன் சொல்ல,

''குழந்தாய்! விநாயகசதுர்த்தி, வைகாசி விசாகம், கிருத்திகை போலவே சித்திரை மாதச் சித்ரா பௌர்ணமி உன்பிறந்த நாள். அன்று உன்னைச் சிறப்புடன் பூஜிப்பவர்களுக்கு பாபங்களிலிருந்து விலக்களிக்கலாம். மைந்தர்களில் எங்களுக்கு ஏற்றத் தாழ்வு கிடையாது'' என உமையம்மையும் ஆசிர் வதித்தாள்.

சித்ரகுப்தனை அருகில் அழைத்து உச்சி முகர்ந்து விபூதியிட்டு, வலது காதிலே சிவனும், உமையும் சித்திரகுப்தா என்று பெயர் சொல்லி அழைத்தார்கள். பட்டுக்கட்டி நகைகளெல்லாம் பூட்டி ''மற்றவர்களுக்குக் கஷ்டமாயிருக்கின்ற கணக்குகள் யாவும் உனக்கு சுலபமாய் வரும்'' எனவும் ஆசிர் வதித்தனர்.

இந்திரனும், இந்திராணியும் குழந்தை யில்லை என்று நெடுங்காலமாய் தவம் செய்தனர்.

கௌதமர் சாபத்தால் பூமிமலடானது, வானம் மலடானது, மரங்கள் மலடானது, செடி கொடிகளில் பூவில்லை, காயில்லை, பசுக்கள் மலடானது. அதனால் பாலில்லை.

ஒரு ஊசியை உச்சியில் வைத்து, அந்த ஊசிமேல் உள்ளங்கால் வைத்து ஒற்றைக்காலால் பசுபதியை நோக்கித் தவமிருந்தான் இந்திரன். சில காலங்கள் சென்றபின், சுற்றிலும் குழிவெட்டி அக்கினி குண்டம் வளர்த்து இரண்டாயிரம் வரு டங்கள் தவமிருந்தான்.

தேவி ''சுவாமி! இந்திரன் செய்தது பெரும் குற்றம்தான்! ஆனாலும் அவன் உம்மை நோக்கி கடும் தவம் புரிகின்றானே! மன்னித்து அருளக் கூடாதா?'' என்று கேட்க, நந்தியை அழைத்து இந்தி ரனை அவளது மனைவியுடன் அழைத்துவரச் சொன்னார் சிவபெருமான்.

நந்தி இந்திரன் இந்திராணியை அழைத்து வந்தார். ஈசன் இந்திரனிடம் ''என்ன வரம் வேண்டு மென்று கேட்க, இந்திரன்,'' சோமசுந்தரப் பெரு மானே! நாடே மலடாகிவிட்டது. காடுபற்றி எரி கிறது! பூமி செழிக்கவேண்டும்; புத்திரன் பிறக்க வேண்டும்; பூக்கள் மலரவேண்டும்'' என வேண்டி னான்.

''பூவையர் சாபம் பொல்லாதது அமரேந் திரா.... அகலிகை கல்லாய் கிடக்கிறாள். அந்தப்பாவம் லேசில் விடுமா? காமதேனு வயிற்றில் பாலன் பிறப்பான். பாலன் பிறந்த பிறகு எங்குமே செழிப்புத் தான்'' என்று வரம் கொடுத்தனுப்பினார்.

இந்திரன் சென்றபிறகு காமதேனுவை வர வழைத்து ''இந்திரனின் கொட்டிலில் ஒரு புத்தி ரனை ஈன்ற பிறகு, வா'' என்றார்.

பசு கண்ணீரோடு நிற்க, ''சித்திரை மாதம் பௌர்ணமியன்று உனக்கு மோட்சம் கிடைக்கும்'' என்று வரமும் கொடுத்தார்கள்.

காமதேனு கன்றாய் மாறி இந்திரன் இந்தி ராணிக்குப் பின்னால் போய் செல்லமாய் முட்ட, இது ஈசனளித்தவரம் என்று புரிந்துகொண்டு அமரா வதிப் பட்டணம் சென்றபின், வளர்பிறையில் வைகாசி மாதம் 21ம் நாள் வெள்ளிக்கிழமை திரு வாதிரை நட்சத்திரத்தில் கன்றினுக்கு 'மாவேந்திரி' எனப் பெயர் சூட்டினார்கள். பெயர் சூட்டுவிழா தான தருமங்களோடு, வேடிக்கைகளோடு இருபது நாட்கள் கோலா கலமாய் நடந்தது.

அதை மந்தைகளோடு ஓட்டுவதில்லை. தினமும் கோபூஜை செய்தாள் இந்திராணி. பசு வயிற்றில் எப்போது புத்திரன் பிறக்கும் என்று தினமும் அதன் வயிற்றைத் தடவிப் பார்ப்பாள்.

இந்திராணியின் ஏக்கத்தைக் கண்டு மீண்டும் தவம் செய்யப்புறப்பட்டான் இந்திரன். இடையில் புலித்தோல்; கழுத்தில் ருத்ராட்சம்; ஒருகையில் பிட்சபாத்திரம்; மறுகையில் கமண்டலம் மழுவாள்; (தவத்தைக் கலைப்பவரை ஒடுக்க) இந்திராணி அரணிக்கட்டையைக் கடைந்து நெருப்புண்டாக்கி மண் கலயத்தில் போட்டுக் கொடுக்க, காடு சென்று அக்கினி வளர்த்துத் தவமிருந்தான் இந்திரன். மறுபடி சக்தி சிவபெருமானைத் தூண்டிவிட நந்தியைக் கூப்பிட்டு சித்திர குப்தனை அழைத்து வரச் செய்தார் ஈசன்.

சித்திராபுத்திரன் வந்ததும் ''இந்திரன் கணக் கிலே மக்கட்பேறு உண்டா?'' என்று கேட்டார்.

''அதிக புண்ணியம் செய்தவர்க்கு நல்ல புத்திரன் பிறப்பான். அதிகபாவம் செய்தவனுக்குத் தீய புத்திரன் பிறந்து அவமானத்தை ஏற்படுத்துவான். கடனைக் கழிக்கப் பிறக்கும் பிள்ளைகள் பெற்றோ ருக்கு முன்பே காலமாகிவிடுவர். பாப புண்ணியம் இரண் டும் கலந்து செய்வோருக்கு கர்மவினைப்படி புத்திரயோகம் ஏற்படும். முற்பிறவியில் பெற்றோரைத் தவிக்க விட்டவர்களுக்கு பிள்ளை பாக்கியம் கிடை யாது. சென்ற பிறவியில் மனைவி இருக்கச் சோரம் போனவனுக்குப் பிள்ளைகள் பிறந்து பிறந்து மரிக்கும். அகலிகையை ஏமாற்றிய பாவம் தவத்தால் அழி யாதது. அதனால் இந்திரன் விந்துவில் ஜீவன் இல்லை'' என்றார் சித்திரகுப்தன்.

''சரி நீயே போய் இந்திரன் வளர்க்கும் பசுவின் வயிற்றில் பிறப்பாய் '' என்றார் கைலாயங்கிரி நாதர்.

''சுவர்க்கத்திலுள்ள சம்புப் பொய்கையில் ஒரு தாமரைப் பூவாக இரு. காமதேனு அங்கே தண்ணீர் அருந்த வரும். தாமரை மலரையும் சேர்த்து தின்று விடு. அதுவரை கணக்குகளை மகாவிஷ்ணுவிடம் ஒப்புவித்து விடு'' என்று உத்தரவிட்டார் மகேசன்.

ஆயிரம் பேர் சேர்ந்தாலும் அசைக்க முடியாத சுவடிக்கட்டைத் திருமாலிடம் கொடுத்து ஒரு சிறு குறிப்பு எழுதிக் கையில் வைத்துக்கொண்டார் சித்ரகுப்தன்.

'' இது என்ன ஓலை?'' என்று உமை கேட்க, ''தாயே! எல்லாக் கணக்கின் தலைக்குறிப்பும் இதனுள் இருக்கிறது. இதையும் எழுத்தாணியையும் நான் யாரிடமும் தரமாட்டேன்'' என்று பணிவுடன் சித்ரகுப்தர் மறுக்க, ஈசன் ''விட்டுவிடு, ஏடும், எழுத் தாணியும் கொண்டே பிறக்கட்டும்'' என்று அனுமதி அளித்தார்.

தாமரை மலராக இருந்த சித்ராபுத்திரன் சுற்றிலும் பார்க்கின்றார்.

'' ஆகா.... இந்தப்பொய்கை எத்தனை பெரியது. அடேயப்பா... எத்தனை ஆழம்... சுற்றிலும் என்ன அழகு! என்ன மணம்! இந்த சண்பக மலர்களால் வாசனையா? அன்னக் கூட்டங்களும், வாத்துக்களும் நீந்தும் காட்சிதான் என்ன அழகாய் இருக்கின்றது! பவளக்கொடிகள் என் தண்டிலே சிக்குகின்றதே! ஆ..... முத்தும், பவளமும் விளையும் இடத்தில் பிறக்க என்ன புண்ணியம் செய்திருக்கிறேன்! அதோ...... கிழவர்கள் மூழ்கி எழுந்து குமரர்களாகி விட்டனரே! பொய்கையில் அமிர்தம் கலந்திருக் கிறதுபோலும்! அதோ பலாவும், மாவும் பிஞ்சு விட்டிருக்கிறதே! குழந்தைபிறக்கும் வேளையில் அற்புதங்கள் நிகழும் என்று ஈசன் வரம் கொடுத் திருக்கின்றாரே! மல்லிகை, முல்லை, பிச்சிப்பூ, இருவாட்சி எல்லாம் மொட்டு விட்டிருக்கின்றனவே! மூன்று பக்கமும் மலையிலிருந்து சிற்றருவிகள் விழுந்து பொய்கையை நிறைக்கின்றன. ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி ஆகியவற்றின் வாசனை மலைகளிலிருந்து வருகின்றது!'' இப்படி அதிசயப்படும் வேளையில், இந்திராணி சுபக்கனவு கள் கண்டு பசுவை மேய்ச்சலுக்கு விடுகின்றாள்.

மேய்ப்பவரிடம் ''ரொம்பதூரம் அடர்ந்த காட்டுக்குள் போகாதிர்கள். சிங்கம், புலி, மலைப் பாம்பு இருக்கும். சாலிப் பயிர், நாய்க் கடுகு, ஆமணக்கு, கள்ளி, எருக்கு, ஊமத்தை ஆகியவற்றை உண்ணாமல் ஜாக்கிரதையாய் பார்த்துக் கொள் ளுங்கள்'' எனச் சொல்லி அனுப்பினாள்.

தண்ணீர் குடிக்க பொய்கைக்கு வந்தது காமதேனு. வாயுவின் பலத்தால் தண்ணீரோடு தாமரைப்பூவும் உள்ளே போயிற்று. போனநேரம் சூல்கண்டது. வாலைச் சுழற்றி அடித்தது. வாயில் நுரைதள்ள மயங்கிப்படுத்தது. பின் எழுந்து தள்ளாடி நடந்து வந்தது.

மாட்டைப் பார்த்த மங்கையர் ''நச்சுப் புல்லைத் தின்றிருக்குமோ? நாகம் தீண்டியிருக் குமோ? சிங்கம், புலி எதையாவது கண்டு மிரண் டிருக்குமோ?'' என்று எண்ணி திருஷ்டி சுற்றினர். மஞ்சளைப் பூசி சந்தனம், குங்குமம் இட்டனர். கெட்டிக் கழுநீரில் தவிடும் புண்ணாக்கும் கலந்து வைத்தனர். ஒருத்தி பச்சைப்புல் அறுத்துக் கொண்டு வந்து போட்டாள். இந்திராணியிடம் செய்தி சொல்ல ஓடினாள் ஒருத்தி.

செய்தி கேட்ட இந்திராணி பதறிப் போய் ஓடிவந்தாள். பசு இலக்கணம் தெரிந்த மருத்து வர்களையும், அனுபவமுள்ள இடையர் தலைவர் களையும் அழைத்து வரச் சொன்னாள்.

அவர்கள் வந்து மாட்டை பரிசோதித்து ''இன்றைக்கோ, நாளைக்கோ கன்று போடும் போலிருக்கிறதம்மா. ஆனால் பசு சூலானதே, தெரியவில்லையே'' என்றார்கள்.

''தேவகர்ப்பம்'' என்று பேசிக் கொண்டார்கள் பலர்.

பஞ்சாட்சரம் ஜெபித்து தியானத்தில் ஆழ்ந்துவிட்டாள் இந்திராணி.

''பார்வதி, இந்திரன் தவத்திலிருக்கிறான். அவன் செய்த பாபங்களுக்கு எந்தத் தவமும் ஈடாகாது. இந்திராணியும் தியானத்திலாழ்ந்து விட்டாள். நீ போய் ஆறுதல் சொல்லிவா'' என்றார் வெள்ளியங் கிரிவாசன்.

ஈசுவரி குறத்தி வடிவில் வந்தாள். இடுப்பிலே கூடையும், பொற்பூண் பூட்டிய பிரம்புமாக பாடிக் கொண்டுவந்தாள். பாடல் கேட்டு கண்விழித்தாள் அமராவதி. ''குறத்தியைக்கூட்டிவா. குறிகேட்கலாம்'' எனப்பணிப்பெண்ணை ஏவினாள். பார்வதியான குறத்தி வந்தாள்.

''உட்காரம்மா, இந்தப்பசு இன்று காலை மேயப்போகும் வரை நன்றாக இருந்தது. அங்கே எதைத்தின்றதோ? எது கடித்ததோ... கொட்டிலில் நிற்காமல் அலைபாய்கிறது. வாலை அடித்துக் கொள்கிறது. உட்காருவதும், எழுந்திருப்பதுமாக.... அதோபார்..... அந்தமாதிரிதான் கண் சொருகிக் கொள்கிறது! மாந்திரீகன் காற்று அடித்துவிட்டது என்று பூசை போடுகிறான். ஜோதிடம் கிரகம் சரியில்லை என்று பரிகாரம் சொல்கிறான். மருத்துவன் கர்ப்பம்; இன்றோ நாளையோ கன்றுபோட்டுவிடும் என்று மருந்து கொடுக்கிறான். ஆனால் வயிறுபுடைத்து இருக்கிறது. மாடு இறந்துவிடுமோ என்று பயமாக இருக்கிறது. பரமேசுவரனைத் தவிர வேறெவரும் எனக்குத்துணை இல்லை'' என்று பலவாறு புலம்பினாள் இந்திராணி.

'பயப்படாதேயம்மா, நான் பார்த்துச் சொல்கிறேன். பரமசிவன் தாயுமானவராய் வந்து பிரசவம் பார்த்தவராயிற்றே! அவரை நம்பினவர் களைக் கைவிட மாட்டார்'' என்றவள் பசுவைத் தலை முதல் கால்வரைத் தடவிக் கொடுத்து, சாணி யால் பிள்ளையார் பிடித்து, தேனைவிட்டு தினை மாவைப் பிசைந்து நிவேதனம் பண்ணி விட்டு கண்ணை மூடித்தியானம் செய்துவிட்டு,

''புத்திரன் வேணுமென்று தவமிருந்ததால், பரமசிவன் அருளால் பசு வயிற்றில் புத்திரன் பிறக்கப் போகிறான். கையிலே பொன்னேடும், எழுத்தாணியும் கொண்டு பிறக்கப்போகிறான். பொற் குண்டலமும் பூணூலும் போட்டிருப்பான். சித்திரைமாதம் சித்திரை நட்சத்திரம், ஞாயிற்றுக்கிழமை, பௌர்ணமி அன்று குழந்தை பிறக்கவில்லையென்றால் நான் குறி சொல்லும் கோலை இனி எடுக்கமாட்டேன். கருவூலம் அவன் கையிலிருப்பதால் பதினான்கு லோகக் கணக்கு குறிப்பையும் தாங்க மாட்டாமல் பசு தவிக்கிறது; தள்ளாடுகிறது. என் பேர் முத்தாலம்மா; நிறைநாழிமுத்து அளந்து கொடு; நான் உத்தரவு வாங்கிக்கிறேன்'' என்று கேட்கவும், இந்திராணி ஈசுவரியின் கூடையில் நிறைநாழி முத்து அளந்து போட்டாள்.

குறத்தியாய் வந்த பார்வதி சென்றபிறகு மாட்டுப் பிரசவம் பார்ப்பவர்கள். மனிதப் பிரசவம் பார்ப்பவர்கள் இருவரையும் அழைத்தாள் இந்திராணி. பசுவை விஸ்தாரமான மண்டபத்துக்கு கொண்டுவரச் செய்து நான்கு பக்கமும் மறைப்புக்கட்டினார்கள். கருப்பட்டி கலந்த கழுநீரில் பருத்திக் கொட்டை அரைத்து வைத்தாள்.

இந்த அதிசயத்தைப் பார்த்த தேவர்களும் ரிஷிகளும, அந்தணர்களும் ஆகாயத்தில் கூடியிருந்தனர். முகூர்த்தம் பார்த்து ஜாதகம் எழுத முனிசிரேட்டர்கள் காத்திருந்தனர். தானம் வாங்கவென்று ஒரு கூட்டம் காத்திருந்தது.

குறத்தியாய் வந்த ஈசுவரி குறித்த நாழிகையில் குழந்தை பிறந்தது. மாட்டின் குளம்பு பட்டுவிடக் கூடாதென்று தங்கத் தாம்பளத்தில் குழந்தையை ஏந்தினர். எங்கும் இன்னிசை முழக்கங்கள். தவமிருக்கும் இந்திரனுக்குச் செய்தி சொல்லி அனுப்பினாள் இந்திராணி.

தொப்புள்கொடி அறுத்து, சோணை எடுதது குழந்தையை நீராட்டிப் பட்டுத் துணியில் போட்டார்கள். இந்திரன் விரைந்து வந்து குழந்தையைப் பார்த்து உச்சி முகர்ந்து, உள்ளங்கால் கண்ணில் வைத்து ஈசுவரப் பிரசாதம் என அகமகிழ்ந்தான்.

எல்லாமே சித்திரையானதால் சித்திராபுத்திரனென்று பெயர் சூட்டினார்கள். ஏராளமான தான தர்மங்களும் செய்தனர். அன்னக்கொடி கட்டி, அன்ன தானம் செய்தான் இந்திரன். நாடெல்லாம் மழை பெய்து செழித்தது. 'பாலன் வாழ்க' என அனைவரும் குலவையிட்டனர்.

குழந்தைப் பசிக்கும்போது பசுவின்மடி அருகே தாதியர் கொண்டு சென்று பால் குடிக்கச் செய்வர். அவ்வேளை பசு அன்போடு நக்கிக் கொடுக்கும். இந்திராணி அருகிலிருந்து கண்காணிப்பாள். ஒருநாள் பாலன் பால் குடிக்கையில் பசுகாலை உதற, குழந்தை முகத்தில் கால்பட்டு அலற, இந்திராணி கோபமுற்று அருகிலுள்ள தடியால் பசுவை அடித்துவிட்டாள்.

குழந்தையை உள்ளே தூக்கி வந்து சமாதானப்படுத்த முனைந்தனரே தவிர பசுவை எவரும் கவனிக்கவில்லை.

பசு கண்ணீர் பெருக ''சிவபெருமானே! குழந்தை என்ற பாசம் எனக்கில்லையா? புல்லிலிருந்து வந்து என் முழங்காலில் ஊர்ந்த புழு குழந்தையைத் தாங்கியிருந்த இளம்பச்சைப் பட்டுத் துணிக்குத் தாவ இருந்தது. காலை உதறினேன். எனக்கு வாயா? இருக்கிறது. இதை எடுத்துச் சொல்ல, சொன்ன படி இனி என்னை அழைத்துக்கொள்ளும்'' என வேண்டியது.

அடுத்த நிமிடம் சப்தமில்லாமல் அங்கே தேவலோக விமானம் வந்திறங்க காமதேனு அதில் ஏறிக்கொண்டு தேவலோகம் போய் சேர்ந்தது.

குழந்தை சமாதானமுற்று உறங்க, தொட்டிலிலிட்டு இந்திராணி தாலாட்டுப் பாடுகின்றாள்.

1. ''இந்திரானார் செல்வங்கள் ஈடேற்ற வந்தவனே!
வானுலகம் ஆள வந்து பிறந்தவனே!
மைந்தனாய் வந்து மகவாசை தீர்த்தவனே!
எங்கள் குறை தீர்த்த இளம்பிறையே
கண்வளராய்!

2. மண்ணின் கணக்கை மகிழ்ந்தெழுத வந்தவனோ!
விண்ணுலக கணக்கையும் விரைந்தெழுத
வந்தாயோ!
முற்கணக்கும் பிற்கணக்கும் முன்னேட்டனுப்
படியும்
துட்டர் கணக்கும், துரோகியர்கள்
தன்கணக்கும்

3. சிட்டர் கணக்கும் தெரிந், ,ழுத வந்தவனே!
எங்கள் குலம் வாழ எழுந்தருளும் நாயகமோ!
தேவேந்திரன் தவத்தால் சிறிய உயிரும் செய்யும்
நன்மைகளும் தீமைகளும் நன்றறிய
வந்தவனோ!

4. சீராய் சிவலோகம் சேருகின்ற புண்ணியரை,
ஆராய்ந்து சொல்ல அறிவுடனே வந்தவனே!
ஆவின் வயிற்றில் அவதரித்த பாலகனே!
எங்கள் அரும் பொருளே! இந்திரனார்
கண்மணியே!

5. இந்த நல்ல தொட்டிலிலே என்மகனே
நித்திரைபோ!
ஆதிசிவன் அருளால் அவதரித்த
மாணிக்கமே!
ஏடெடுத்து வந்தவனே! எழுத்தாணி
பிடித்தவனே!
சித்திரையின் புத்திரனே! சிறப்புடனே
கண்வளராய்!

குழந்தை நன்றாகத் தூங்கி எழுந்து விளையாடியபின் பசியால் அழுதபோது தான் மாட்டைத் தேடினார்கள். மாட்டைக்காணோம் என்ற செய்தி கேட்ட இந்திராணி ஊரெங்கும் தேடச்சொல்லி சலித்துப் போனாள்.

குழந்தை கைவிடாமல் கதறுகின்றது. பிள்ளை பெற்ற மங்கையரெல்லாம் பால் கொடுக்க முன் வந்தார்கள். குழந்தை திமிறிக் கொண்டு அலறியது. பின்னர் வேறொரு பசுவின் பாலை வலுக்கட்டாயமாகப் புகட்டிச் சமாதானம் செய்தனர்.

'மாயையாய் வந்த பசு பாலகனை ஈன்றுவிட்டு மாயமாய் போய்விட்டது' என்று யாவரும் பேசிக் கொண்டார்கள்.

சித்திரா புத்திரன் முகம்பார்த்து சிரித்தான்; நீந்தினால் நெஞ்சுதேயுமென்று ஓடிப்போய் எடுப்பாள் இந்திராணி. தவழ்ந்தால், இந்திராணி பார்த்தால் முட்டிக்கால் தேயுமென்று கோபிப்பாள் என்று தாதியர் தாவிச் சென்று தூக்குவர். உட்கார்ந்தான், நின்றான்; தளர்நடை பயின்றான். ஓடி விளையாடினான். இந்திரனும் சசிதேவியும் மகிழ்ந்தனர்.

குழந்தைக்கு ஐந்து வயதாயிற்று. ஆசிரியரை அழைத்து கல்விச் செல்வம் கற்பித்தனர்.

மணல் பிஞ்சுக் கையை உறுத்துமென்று தவிட்டைக் கொட்டச்செய்தாள் இந்திராணி. 'ஹரி...... ஓம்........' என்று ஆசிரியர் சொல்ல, சித்திரா புத்திரன் அவரை உற்றுப்பார்த்து, ''நீங்கள், அருமையான மனைவி இருக்க, அவரை ஏமாற்றிவிட்டு செட்டிமார் தெருவில் ஒரு பெண்ணை சேர்த்துக் கொண்டீர்களே! இது நியாயமா?'' எனக் கேட்க ஆசிரியர் பேந்த பேந்த விழித்துக்கொண்டு ''அப்புறம் வருகிறேன். அவசர வேலையொன்றிருக்கிறது'' என்று போய் விட்டார். விசாரித்ததில் அது நிஜம்தான் என்று தெரியவந்தது.

அதுமுதல் சித்திராபுத்திரன் பக்கத்தில் அணுகவே எவரும் அஞ்சினர். வேலைக்காரி, வண்ணான், நாவிதன் எல்லோர் குட்டையும் அம்பலப்படுத்தினான் சித்ராபுத்திரன்.

பாடம் சொல்லிக் கொடுக்க எவரும் முன் வரவில்லை. பழைய ஆசிரியர் எங்கு போனார் என்றே தெரியவில்லை.

''எது களவாடினாலும் எண்ணையைக் களவாடக் கூடாது'' என்றான் ஒருநாள். தூக்கோடு எண்ணையைக் கீழே விட்டுவிட்டான் தாதிப்பெண். அதுமுதல் மைந்தனுக்கு இந்திராணியே எண்ணை தேய்த்து நீராட்டும்படி ஆயிற்று.

சித்திராபுத்திரன் வளரவளர தொல்லைகளும் வளர்ந்தன. உன்னோடு பெரிய தொல்லையாய் போயிற்று' எனப் பெற்றவர்களும் கடிந்து கொண்டனர்.

''அம்மா என்பணி கணக்கெழுதுவது. ஈசுவரன் எனக்களித்த வரப்பிரசாதம் ஞாபகசக்தி, வேகமாய், விட்டுப்போகாமல் கணக்கெழுதும் திறன்; என்னைவிட்டுவிட்டால் நான் போய் கணக்கெழுதுவேன், என வேண்ட, பெற்றோர் பிரியாவிடை கொடுத்தனர்.

கைலாயம் அடைந்தான் சித்திரகுப்தன். பார்வதி பரமேசுவரரைப் பணிந்தான். காமதேனுவை அழைத்து ''உன் பிள்ளையைப் பார்த்தாயா?'' என்று கேட்டார் ஈசன்.

காமதேனு சித்திராபுத்திரனை நக்கிக் கொடுத்தது. முகத்தை உரசியது.

ஈசன் ''சித்ரபுத்ரா.... பூலோகத்தை சுற்றிவா.. யமதர்மனோடு சேர்ந்து பாவங்களுக்கான நரகங்களை ஏற்படுத்து'' என்று கூறி ஆசி வழங்கினார்.

சித்ரகுப்தன் சென்றபிறகு தேவேந்திரன் வந்தான். ''பிள்ளைவரம் கேட்டால் பிரச்சினையைப் பிள்ளையாகத் தந்து விட்டீர்களே'' என்றான் இந்திரன்.

''நீ எத்தனை பேர்களுக்கு பிரச்சினையாய் இருந்திருக்கிறாய், ஒரு பிரச்சினைக்கே இப்படி

துக்கப்படுகிறாயே....... போ, போ'' என்று கடிந்து கொண்டார்.

யமதருமனும், சித்திராபுத்திரனும் கலந்து பேசினர். மயனும், விசுவகர்மாவும் அவர்கள் சொன்ன படியெல்லாம் முள்ளாளான காடுகள், சரளைக் கற்கலான படுக்கைகள், தரைகள், இரும்புச் செக்குகள், இரும்புத் தூண்கள், செப்புத்தூண்கள், அடியிலே குழிவெட்டி, தணலிட்டு அதன்மேலே இரும்பு முக்காலிகள், விதவிதமான கிடுக்கிகள், தொறட்டிகள், கொறடாக்கள், சகதிக் குழிகள், மேலே நூற்பாலங்கள், அட்டைக் குழிகள், கிருமிக்குழிகள் எனப்பலவிதமான நரகங்களை அமைத்துக் கொடுத்தனர்.

''பெற்றவர்களைப் பேணாத பாவியர்க்கு அட்டைக்குழி; பொய்வழக்கு தொடுத்தவர்களுக்கு கொறடாவால் நாக்கைப் பிடுங்கவேண்டும். பணத் துக்காகப் பொய் சாட்சி சொல்வாரை அரணைக் குழியில் தள்ளவேண்டும். கன்றுக்குப் பால்விடாமல் ஒட்டக் கறப்பவர்களை இந்த இரும்பு முக்காலியில் கட்டிப் போடவேண்டும். அனல் தகிக்கும்போதுதான் பசுவின் தாபமும், கன்றின் தவிப்பும் புரியும். மனைவிக்கு, கணவனுக்குத் துரோகம் செய்பவரை இந்தப் பழுக்கக் காய்ச்சிய இரும்பு, செப்புத் தூண் களில் கட்டிப் போட வேண்டும். தவறான எடை போட்டுப் பொருள் விற்றவரை நூற்பாலம் கடந்து வரும்போது அறுத்துச் சகதிக் குழிக்குள் தள்ள வேண்டும். ஊரார் உடமையை மோசம் செய்தவர் களை முள்ளுவனத்தில் நடக்கவிட்டு ஆணிப் படுக்கையில் கட்டிப்போடவேண்டும். கொலை செய்வோரை கண்களைப் பிடுங்கி அனற்குழியில் தள்ள வேண்டும். கொள்ளையடிப்போரை மாறுகால், மாறுகை வாங்கி சரளைச்சாலையில் தள்ளிவிட வேண்டும். பிறரைப் பற்றிக் கோள் செல்வோரின் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றவேண்டும். தவறான வதந்தி பரப்புவோரை பாம்புக் குழியில் தள்ள வேண்டும். வேண்டிய செல்வத்தைத் தேவைப்படு பவர்க்கு உதவாமல் பூட்டி வைப்போரை, உடலிலே ஊசிகளால் புண்ணாக்கி உப்புக் கரைத்த குளத்தில் தள்ள வேண்டும். ஆட்சியில் இருப்பவர்கள் செய்யும் தவறுகளுக்குக் கொதிக்கும்சுண்ணாம்புக் காள்வாயில் தள்ள வேண்டும்.

இப்படி பலவாறாக பாவங்களுக்கு தண்டனை களையும், புண்ணியங்களுக்குத் தக்கபடி சுவர்க்க போகங்களையும் குறித்துக் கொண்டார் சித்திரா புத்திரன்.

மார்க்கண்டேயருக்காக பாசக் கயிறு வீச, அது லிங்கத்தையும் பற்றி இழுக்க சிவனால் உதைபட்டு பாதாளம் போய் வீழ்ந்தான் யமன். மரணம் ஏற்படாததால் பாரம் தாங்கமாட்டாமல் பூமா தேவி படைப்புத் தொழிலை நிறுத்தும்படி, பிரம்மனிடம் வேண்ட, பிரும்மா தேவர்களுடன் மகாவிஷ்ணுவிடம் சென்று பிரார்த்திக்க, விஷ்ணு, எல்லோருடனும் கைலாயம் சென்று சிவபெரு மானிடம் முறையிட்டனர். சிவன் யமனை உயிர்ப் பித்து, சித்திராகுப்தனிடம், ''கொடுத்த ஆயுள் வளரும் படி கணக்கை மாற்றிக்கொள்'' என்றார்.

அன்னதானம் செய்தவர்கள், ஆலயம் எழுப் பியவர், அதற்குக் காரணமாக இருந்தவர், கருணை மிக்கவர், கன்றுக்குப் பால்விட்டோர், இறைத் தொண்டு செய்வோர், நல்லெண்ணம், நன்னடத்தை உடையோர், மாதா பிதாவை மகிழ்ச்சியோடு காப்பாற்றுபவர்கள், ஆலயத்தொண்டு அனுதினமும் செய்பவர்கள், பத்தினிதனைவிட்டு பரத்தை இல்லம் நாடாதார், விபூதி ருத்ராட்சம், துளசிமாலை அணிந் தவர்கள், பிறர் பொருளைக் கண்டு பாம்பென்று பயந்து ஒதுங்குவோர், கடமை முடிப்பவர், பிதுர்க்கள் காட்டிய பாதையைக் கடைபிடித்து ஒழுகும் மானிடர்கள் இவர்களின் ஆயுளைக் கூட்டிக் கொள்ளுங்கள்.

''இவர்களைப் பூவுலகக் கடமை முடிந்த பிறகு தேவலோகத்திற்கு அழைத்து வாருங்கள்'' என்று கூறி அனைவருக்கும் ஆசிகூறினார். யமன் உமா மகேஸ்வரரை, லஷ்மி நாராயணரை, ஸ்ரீவித்யா ரூபிணியான சரஸ்வதியுடன் கூடிய பிரம் மனையும் வணங்கிப் பணிவுடன், சித்திராகுப்தனோடு யமலோகம் வந்து தன் கடமையைச் சீராக செய்ய ஆரம்பித்தான்.

வடக்கு வாசலில் தண்ணீர் பந்தல்......... தாகமென்று வந்தவர்க்கு தண்ணீர் கொடுத்தவர்க்கு, குளம் வெட்டியவர்களுக்கு, பூமியில்(மண்) மல, ஜலம், வாய் கொப்பளித்தல் போன்ற அசுத்தங்கள் செய்யாதவர்களுக்கு, நதிகளை, நீர்நிலைகளைப் புனிதமாய் கருதியவர்களுக்கு ஆலயங்களுக்கு ஆல யங்களில் பக்தியுடன் அபிஷேகநீர் கொணர்ந்தவருக்கு அந்த வாசல் வழியே வந்து தண்ணீர் சாப்பிட்டு இளைப்பாறிச் செல்ல அனுமதியுண்டு. அதற்கு கைலாசவாயில் எனப்பெயர்.

ஏகாதசி விரதமிருந்தவர், திருமாலை தினம் துதித்து வணங்கியவர் கோவில்களைப் பெருக்கி, மெழுகி, நீர்தெளித்துக் கோலமிட்டோர், கங்கை போன்ற புண்ணிய நதியில் நீராடியவர், துளசியும், பூஞ்செடிகளும் வைத்து தினமும் பூக்கட்டிச் சாற்றிய வர்களுக்கு கிழக்கு வாசல். அதற்கு வைகுண்ட வாசல் என்று பெயர். தீபங்களும், வாசனைகளும், கலை அழகுகளும் கண்ணையும் மனதையும் கவரச்செய்யும்.

மேற்கு வாசலும், தெற்குவாசலும் நரகத்துக்குச் செல்பவை. மாளிகையின் நடுவில் சித்திராபுத்திரன் அமர்ந்து பட்டோலை வாசித்து ஆத்மாக்களை அனுப்பிக் கொண்டிருக்கிறார்.

அதலம், விதலம், சுதலம், தலாதலம், ரஸா தலம், மஹாதலம், பாதாளலோகம் என்ற லோகங் களுக்கு ஆத்மாக்கள் செய்த புண்ணியங்களின் தரத்திற் கேற்ப அனுப்புகிறார்.

தாமிஸ்வரம், ரௌரவம், மகாரௌரவம், கும்பியாகம், காலசூஸ்திரம், அசிபத்திரம், பன்றி முகம், அந்தகூபம், கிருமிபோஜனம், அக்கினி குண்டம், வஜ்ர கண்டகம், சான்மலி, வைதரணி, பூயோதம், பிராணரோதம், விசஸனம், லாலாபட்சம், சாரமேயாதனம், அவீசி, பரிபாதனம், சாரகர்த்தமம், ரட்சோக்னம், சூலப்ரோதம், தந்தசூகம், வடாரோதம், பர்யா வர்த்தனம், சூசி முகம் என்ற பற்பல நரகங் களுக்கு ஆத்மாக்கள் செய்த பாபக்கணக்கைப் படித்து மேற்கு, தெற்கு வாசல் வழியால் யம கிங்கிரர் களால் கொண்டு செல்லப்படுகின்றனர்.

''முதலை[illegible] ''பாப பலனை அனுபவிக் கிறாயா?'' புண்ணியபலனை அனுப[illegible]கிறாயா?'' என்ற கேள்வி ஏறத்தாழ பாபபுண்ணியங்கள் சமமாக இருக்கும் ஆத்மாக்களிடம் கேட்டு அவர்கள் விருப்பப் படி அழைத்துச் செல்லப்படுகிறார்கள்.

பாபம் சிறிதளவு செய்தவர்களுக்கு பக வானால் கணக்கு பரிசிலிக்கப்பட்டு 'மறுபிறவியில் அனுபவித்துக் கொள்ளட்டும்' என்ற சலுகை தரப் படுகிறது. புண்ணியம் கொஞ்சமே செய்திருப்பவர் களுக்கும் அதே போன்று தான் இறைவன் கட்டளை யிடுகிறார்.

பாப புண்ணிய பலன்களை அனுபவித்த பின் உயிர்களுக்கு செய்த நன்மைதீமைகளுக்கொப்ப மறுபிறவி தரப்படுகிறது.

இந்தப் புண்ணிய சித்திரா பௌர்ணமி தினத் தில் சித்திராபுத்திர பூஜை செய்தபிறகு இக்கதையை பயபக்தியுடனும் சிரத்தையுடனும் படிப்பவர்களுக்கு சித்திராபுத்திரன் கருணை காட்டுகிறார். எப்படி? காய் நறுக்கும்போது கொல்லப்படும் புழுக்கள், காலடியில் சாகும் எறும்பு முதலான ஜீவராசிகள், வாழை இலையை மரத்தினின்றே நடுவில் நறுக்குதல், இப்படிப்பட்ட சின்னச் சின்ன தவறுகளைக் கணக்கு களில் பதிப்பதில்லை.

அமராவதி எனனும் புண்ணியவதி எத் தனையோ தான தருமங்கள் செய்திருப்பினும் சித்திராபுத்திர நோன்பு நோற்கவில்லை. சித்திரா புத்திரனிடம் வரம் வாங்கி பூலோகம் வந்து சித்திர புத்திர விரதம் இருந்து, பூசை முடித்து தானதர்மங்கள் செய்து மீண்டும் சுவர்க்கலோகம் அடைந்தாள்.

இந்த சரித்திரத்தைப் படித்தவரும், படிப் பிக்கச் செய்தவரும் பூலோகத்தில் தீர்க்காயுளுடன், சகல நலங்களுடன் வாழ்வார். பெண்கள் தீர்க்க சுமங்கலியாய், நோய் நொடியின்றி, மக்கட் செல்வங் களுடன், பதினாறு பேறுகளும் பெற்றுச் சீருடனும் சிறப்புடனும் வாழ்வார்கள்.

## ''சொர்க்கமா?, நரகமா?''

படிப்பு வரவில்லை; முரட்டுத்தனமும், கோபமும் அதிகம் எல்லோரிடமும் சண்டை; தாய் கவலைப்பட்டாள்.

''சித்ர குப்தா.... இவன் கணக்கை நீ எழுதி முடித்து புது ஓலைக்கட்டுப் போடுவாயோ........ இல்லை..... இங்கேயே நரகம் ஆரம்பித்து விடுமோ'' என்று தினமும் புலம்புவாள்.

மகன் கார[illegible] கேட்டான்.

''சித்ர குப்தாய நம:'' என்று தினம் சொல்லிக் கொண்டு வா.... சித்ர குப்தன் உனக்கு நல்லவழி காண்பிப்பார்'' என்றாள். தினமும் அதேபோல் சொல்லிவந்தான்.

சிறுவன் பெரியவனானான்.

அவன் வயதோடு கெட்ட பழக்கங்களும் வளர்ந்தன. ஆனால் 'சித்ரகுப்தாய நம.' என்று சொல்லுவதை நிறுத்தவில்லை! தாயின் போதனை யாயிற்றே!

சித்ரகுப்தன் யோசித்தான். உலகில் சிவன், விஷ்ணு, பிரம்மன், இந்திரன், சக்தி, முருகன், விநாயகர் இப்படி ஏராளமான தெய்வங்கள் இருக்க, விடாமல் நம் பெயரைத் தினமும் உச்சரிக்கிறானே இவன்! வருஷத்திற்கு 365 வீதம் பத்து வயதிலிருந்து சொல்கிறான். தற்போது இவனுக்கு 52 வயதாகிறது. இதுவரை 15,000 நாமாவளிக்கு மேல் சொல்லி விட்டான். இவனது ஏட்டைப் புரட்டுவோம்'' என்று ஏட்டுச்சுவடியைப் படித்தவர் திடுக்கிட்டார்.

அவனுக்கு ஒரு வாரத்தில் மரணம் என்றி ருந்தது. அவனது கனவில் போய், ''அப்பனே, நீ

செய்யாத பாவம் இல்லை..... உன் ஆயுள் முடிய ஏழு நாட்களே உள்ளன. தினமும் என் நாமாவை மட்டுமே உச்சரித்து வந்த உன்னை நரக சிட்சை அனுபவிக்கச் செய்ய எனக்கு வேதனையாக இருக்கிறது. உன் மூதாதையர் உனக்களித்த நிலத்தில் ஒரு குளம் வெட்டு.... ஆழமாக நீர் ஊறும்படியாக இரவும், பகலும் வேலை செய்தாவது குளத்தை வெட்டி முடி. ஒரு மாடு நீர் அருந்தினால் 3 3/4 நாழிகை சுவர்க்க வாசம் உண்டு. பசுவின் உடம்பில் முப்பத்து முக்கோடி தேவதைகளும் வாஸம் செய்கின்றனர். நிறைய மாடுகள் தண்ணீர் குடித்தால் உனக்கு சொர்க்க வாசம் நிரந்தரமாக கிடைக்கும்''.

''முதலில் சொர்க்க வாசம் அனுபவிக்கிறாயா? நரக வாசம் அனுபவிக்கிறாயா?'' என்று யமன் கேட்பார். 'முதலில் சொர்க்கம்'' என்று சொல்லிவிடு'' என்றார்.

முரடன் எழுந்தான். சித்ரகுப்தர் கனவில் கூறியபடி ஏராளமான ஆட்களை வைத்து நிலத்தின் நடுவில் குளம் வெட்டினான். இரவு பகல் ஏராளமான ஆட்கள் வேலை செய்தும் பொட்டு தண்ணீர் வரவில்லை.... எல்லாம் பாபவினை! நாட்கள் ஆறு முடிந்து விட்டதே! ஏழாவது நாள். ஓர் ஓரத்தில் மிக மெல்லிய ஊற்று சுரந்தது. முரடன் மகிழ்ந்தான். மாடு வர வேண்டுமே.....? சித்ரகுப்தன் மாடாக வந்தார். '' குளக்கரையில் நின்று 'ம்மா' என்று குரல் கொடுத்தார். இந்த 'ம்மா'வுக்கு ''இங்கே நீர் இருக்கிறது வாருங்கள்'' என்று பொருள். மாடுகள் ஓடி வந்தன. ஒரு மாடு தண்ணீர் குடித்தது.

அதே சமயம் 'நெஞ்சுவலி' என்று சாய்ந்த குளம்வெட்டிய அவன் உயிரும் பிரிந்தது.

யம பட்டணம் யமதர்மன் முன் குளம் வெட்டிய அவன் நிறுத்தப்பட்டிருக்கிறான்.

''சித்ர குப்தா! இந்த ஆத்மாவின் பாப புண்ணிய கணக்கைச் சொல்லு'' என்றார் யமதருமன்.

சித்ர குப்தன் ஏடுகளைப் புரட்டிவிட்டு ''இவன் பெரும் பாவி...... ஒரே ஒரு புண்ணிய காரியம் மட்டும் செய்திருக்கிறான். உயிர் பிரியுமுன் ஒரு குளம் வெட்டி இருக்கிறான் ஒரே ஒரு மாடு அதில் தண்ணீர் குடித்திருக்கிறது'' என்று உதட்டைப் பிதுக்கினான் சித்திரகுப்தன்.

''3 3/4 நாழிகை உனக்கு சுவர்க்க வாசம் உண்டு. முதலில் சொர்க்கவாசம் அனுபவிக்கிறாயா? நரகவாசமா?'' என்று கேட்டார் யமன்.

''முதலில் சொர்க்க வாசமே அனுபவிக்கிறேன்'' என்றான் முரடன். உடனே அவன் சொர்க்கத்திற்கனுப்பட்டான். தினமும் அங்கே தண்ணீர் ஊற ஊற மாடுகள் வந்து நீர் குடிக்கலாயின. முரடனின் புண்ணியக் கணக்கும் ஏறிக்கொண்டே இருந்தது. சொர்க்கத்திலேயே சுகமாக இருக்கலானான். எல்லாம் எதனால்? சித்ரகுப்தரின் அருளால்! அவர் மட்டும் கனவில் வந்து உபாயம் சொல்லித் தரா விட்டால் முரடன் எத்தகைய கொடூரமான நரக வேதனையை அனுபவித்திருப்பான்! சித்திரகுப்தன் தான் வந்ததன் காரணம் அவரையே நம்பி நாமம் உருவிட்டதால் தானே.

எவரும் முறைப்படி ஒரு கடவுளையாவது பூர்ணமாக நம்பி வழிபட்டுவந்தால் சித்ரகுப்தர் அருளும் கட்டாயம் கிடைக்கும்.

சித்ரகுப்தனுக்கு காஞ்சிபுரத்தில் தனிக்கோயிலே இருக்கிறது. இந்திரன் சித்திரா பௌர்ணமி அன்று அங்கு வந்து பூஜை செய்வதாக ஐதிகம். அங்கு சித்திரகுப்தனுக்கு சித்ராபௌர்ணமி அன்று காலையில் மஹா அபிஷேகமும், மாலையில் திருக்கல்யாணமும் நடைபெறுகிறது. சித்ரகுப்தனின் மனைவி பெயர் ஸ்ரீகாணாம்பிணி தேவி.

சித்ரகுப்தனின் அதிதேவதை கேது. சித்ர குப்தனை பூஜிப்பதால் கேதுவின் உபாதைகளிலிருந்தும் விடுபடலாம்.

நாமும் முறைப்படி சித்ரபுத்ர விரதம் இருந்தால் அவரின் எல்லையில்லா கருணைக்குப் பாத்திரமாவோம்.

* * *

சித்திரை முழுநிலவுத் திருநாளையொட்டி ''சித்திரகுப்த பூஜை'' நூலிலிருந்து இக்கட்டுரை நன்றியுடன் எடுத்து வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் வெளியீடு : கிரி டிரேடிங் ஏஜென்சி, டி.எஸ்.வி. கோயில் தெரு, மயிலை, சென்னை - 600 004. விலை ரூ. 8.00



மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்தில் 'சிவஞான போதம்' அருளிய அருளாளர் அருள்திரு மெய்கண்ட தேவநாயனார் திருநாள் விழா சிறப்புறக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவில் மெய்கண்ட சாத்திர நூல்கள் சிவிகையில் திருக்கோயில் பிரகாரம் வலம் செய்விக்கப்பட்டது. ஆணையாளர் திருமிகு ச. மெய்கண்ட தேவன், இ.ஆ.ப., சித்தார்ந்தப் பேராசிரியர் முனைவர் வை. இரத்தினசபாபதி, ''திருக்கோயில்'' இதழாசிரியர் முனைவர் த. அமிர்தலிங்கம் ஆகியோர் இவ்விழாவில் கலந்து கொண்டனர்.



மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்தில் நடைபெற்ற அருளாளர் மெய்கண்ட தேவநாயனார் விழாவில் மாண்புமிகு தமிழ்வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்கள் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்கள். ஆணையாளர் திருமிகு. ச. மெய்கண்டதேவன், இ.ஆ.ப., தலைமை தாங்கினார்கள். பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள், மயிலம் ஆதீனம் தவத்திரு சிவஞான பாலைய சுவாமிகள், திருவண்ணாமலை (குன்றக்குடி ஆதீனம்) தவத்திரு பொன்னம்பல அடிகள், மயிலை சட்டமன்ற உறுப்பினர் திருமிகு இராமஜெயம் ஆகியோர் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். சென்னை இணை ஆணையாளர் திரு. இரா. சுப்பிரமணியன், பி.ஏ.,பி.எல்., அவர்கள் விழா ஏற்பாடுகளைச் சிறப்புறச் செய்திருந்தார்கள்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 600 034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், எம்.ஏ., பிஎச்.டி.,
அச்சிட்டோர் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்., 142, ஜானி ஜான் கான் தெரு, சென்னை - 600 014.